# சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

வசந்தா

சருமப் பாதுகாப்பிற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறார் வசந்தா. ஆதலால், லக்ஸ் சோப்பை உபயோகிக்கிறேனென்றும், சருமப் பாதுகாப்பை அது ஆச்சரியகரமாக நடைக்கிறதென்றும், தன் சருமத்தை யாதொரு அப்பழுக்குமின்றிக் காப்பாற்றுகிறதென்றும் அவர் கூறுகிறார். அழகு படைத்தும் இந்த கீர்த்திபெற்ற சோப்பின் நுரை சருமத்தை உண்மையாகவே மிருதுவாகவும், மழமழப்பாகவும் செய்து காப்பாற்றுகிறது.



## லக்ஸ் டாய்லட் சோப்

LTS. 433-50 40 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED







# கிருமிகளை ஒழிக்க ரகசிய ஆயுதம்

தாவரங்களிலிருந்து ரகசியமுறையில் தயாரிக்கப்பட்டு, பல நூற்றாண்டுகளாய் உபயோகத்திலிருந்து வருகிற ஹாம்டார்ட் களிம்பு இப்பொழுது உங்களுக்குக் கிடைக்கும். மற்ற சருமரோக நிவாரணிகளை விட இது பன்மடங்கு சக்திவாய்ந்தது. ஒருதடவை உபயோகப்படுத்திய வுடனேயே ஹாம்டார்ட் ஆயின்ட்மெண்ட் கிருமிகளைக் கொன்று, காயங்களையும் தோலைப்பற்றிய இதர கோளாறுகளையும் தழும்பு ஏற்படாதபடி சொஸ்தமாக்குகிறது.

**வெட்டுக்காயம், சுடுகாயம், புண், சொறி சிரங்கு, படை, அரிப்பு, ஒட்டுவாரொட்டி முதலியவைகளுக்கு.**

எப்பொழுதும் 'ஹாம்டார்ட்' களிம்பைக் கைவசம் வைத்திருங்கள். வீட்டுக்கு ஒன்றும் ஆபீஸ் அல்லது தொழிற்சாலைக்கு ஒன்றுமாக இரண்டு டப்பிகள் வாங்குங்கள்.

# ஹாம்டார்ட்
## ஹெர்பல்
# ஆயின்ட்மெண்ட்

**ஹாம்டார்ட் தவாகானா லெபொரேடரீஸ், டில்லி.**

(ஸபி-(Safi)-என்ற சிறந்த ரத்தசுத்தி மருந்து தயாரிப்பவர்கள்) H.D.3.A

எல்லா பிரபல கெமிஸ்டுகளிடமாவது அல்லது கீழ்க்கண்ட சப் ஏஜண்டுகளிடமாவது கிடைக்கும்.

சப் ஏஜண்டுகள்:

1. மெஸர்ஸ். ஈஸ்டர்ன் ஏஜன்ஸீஸ், ஷொரனூர்

சேலம், மதுரை, சென்னை, திருநெல்வேலி, செங்கல்பட்டுக்கு:

2. மெஸர்ஸ். கோல்டன் கம்பெனி, 38, டுப்ளே தெரு, பாண்டிச்சேரி
3. மெஸர்ஸ். கமர்ஷியல் ஏஜன்ஸி, 101, ஆண்டார் தெரு, தெப்பக்குளம் போஸ்டு, திருச்சிராப்பள்ளி




இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

எச். ஜே. பாஸ்டர் & கோ., லிட். பம்பாய், கல்கத்தா, மதராஸ், லாகூர்

---

## உயர்ந்தவை

| | |
|---|---|
| ★ உயர்ந்த மனம் | ● சலிப்பற்ற மனம் |
| ★ உயர்ந்த வாழ்க்கை | ● நோயற்ற வாழ்க்கை |
| ★ உயர்ந்த விரதம் | ● தீமை செய்யாமை |
| ★ உயர்ந்த நகைகள் | ● "பி. ஏ. ஆர்." நகைகள் |

# P. A. ராஜு செட்டியார் & பிரதர்

| ஸ்வர்ண மாளிகை | தந்தி : 'ராஜா'<br>போன் : 218-A | கோயமுத்தூர். |
|---|---|---|

..முன்னமேயே

# லைப்பாய்

பழக்கத்தையும் அவன் அறிந்திருக்கிறான்!



விளையாட்டுக் கருவிகளின் மூலம், அவன் மனதிற் கிசைந்தாற்போல கைகளை உபயோகிக்கும் பழக்கத்தை யடைகிறான். விளையாடும் பொழுதும், தன் வீட்டிலும் விளையாட்டுக் கருவிகளிலுங்கூட மறைந்திருக்கிற அழுக்கு அபாயத்திலிருந்து இன்சனி லைப்பாய் சோப்பின் உபயோகத்தினால் காப்பாற்றிக் கொள்கிற அந்த பழக்கம், மகனைக் காப்பாற்றுகிற தென்பதை தாயார் கவனித்து வருகிறாள்.




**லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது.**

**அது ஒரு நல்ல பழக்கம்.**

L 50-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED






பிளின்ட்
(ஸான்ட்)
கார்னெட்
எமரி
அஜாக்ஸைட்
பேப்பர்ஸ்
கிளாத்
டிஸ்க்ஸ்
ரோல்ஸ்
பெல்ட்ஸ்
டேப்ஸ்
மற்றுமுள்ளவைகள்.

தேவையான எந்த அளவிலும் வெட்டிக் கொடுக்கக் கூடிய தொடர்ச்சியான ரோல்களில் ஸ்டாக் செய்யப்பட்டிருக்கின்றன.

## தொழிற்சாலையின் தேவைக்கு
## அஜாக்ஸைட் ரோல்கள்

எல்லாவித தொழில்களுக்கும், முக்கியமாய் தோல் வேலைகளுக்கும், பட்டசிலை தேவையானது. தோல்களையும் தோல் சாமான்களையும் அறுப்பதற்கும் பூர்த்தி செய்து பளபளப்பாக்கி மெருகு கொடுப்பதற்கும் அஜாக்ஸ் பட்டசிலைகளுக்கு நிகரானது வேறு ஒன்றுமில்லை. இந்தியாவில் எல்லா தொழிற்சாலைகளிலும் அஜாக்ஸ் உயர்தர பட்டசிலைகள் விசேஷ பெயர் பெற்றதாக இருக்கின்றன.

# அஜாக்ஸ்

பிராடக்ட்ஸ் லிமிடெட்,
106, அரண்மனைக்காரத் தெரு,
சென்னை

மானேஜிங் ஏஜண்டுகள்:
**முருகப்பா அன்ட் ஸன்ஸ்**

தென் இந்தியாவிற்கு விற்பனை ஏஜண்டுகள்:
மார்ஷல் ஸன்ஸ் அன்ட் கம்பெனி (இந்தியா) லிமிடெட்,
தபால் பெட்டி 141 :: சென்னை

A. S—K. 11




மலர் 5 | இதழ் 34

1946 மார்ச் 31

பார்த்திப ஞு | பங்குனி 18





உலகத்தில் பரோபகாரம் பல விதத்தில் செய்யலாம்; தேசத் தொண்டும் பல துறைகளில் செய்யலாம். ஆயினும், "ஒரு கதிர் தானியம் விளைந்த நிலத்தில் இரண்டு கதிர் விளையும்படி எவன் செய்கிறானோ அவன்தான் மனிதர்களுக்குள்ளே மிகச் சிறந்த பரோபகாரி" என்று ஒரு மேனாட்டுத் தத்துவ ஞானி கூறியிருக்கிறார். இந்திய தேசம் பெரும் பஞ்சத்தை எதிர்நோக்கியிருக்கும் இந்த நாளில் அந்தப் பெரியார் கூற்றின் உண்மையை அனைவரும் ஒப்புக் கொள்வார்கள்.

★




★

அத்தகைய மனித வர்க்கத்தின் சிறந்த உபகாரிகளில் ஒருவர் நமது இந்த இதழ் அட்டையில் காட்சி அளிக்கிறார். நாற்பது வருஷத்துக்கு முன்னால் இங்கிலாந்தில் படித்தபோது அங்கு இரகசியமாக வேலை செய்த இந்தியப் புரட்சிக் கூட்டத்தைச் சேர்ந்திருந்த டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் 1919-ம் ஆண்டில் மகாத்மா காந்தியின் உண்மைச் சீடர்களில் ஒருவரானார். அது முதல் சுதந்திரப் போரின் முன்னணியில் நின்று பல முறை சிறை சென்று பல தியாகங்களைச் செய்தார்.

ஆனால் டாக்டர் ராஜன் தாம் புகழுடன் வகித்த சுகாதார மந்திரி பதவியை விட்ட பிறகு சென்ற ஐந்து வருஷத்தில் செய்திருக்கும் தொண்டுதான் அவருடைய தேச சேவையின் சிகரம் என்று சொல்லலாம். சென்ற ஐந்து வருஷத்தில் திருவெறும்பூர் மலை என்னும் கிராமத்தில் அவர் தங்கி 65 ஏக்கரா தரிசு நிலத்தைப் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வந்திருக்கிறார். அதில் 35 ஏக்கரா நிலத்தில் 700 கலம் நெல்லும் பாக்கி நிலத்தில் கரும்பும் வெங்காயமும் விளைவிக்கிறார். இதைத் தவிர, ஏற்கனவே 285 கலம் நெல் விளைந்து கொண்டிருந்த 26 ஏகரா நிலத்தில் இப்போது 600 கலம் நெல் விளையும்படி செய்திருக்கிறார். (ஒரு கலம் என்பது 48 பட்டணம் படி.)

மேற்படி வழக்கமான மகசூலைத் தவிர, வரப்போகும் பஞ்சத்தை முன்னிட்டு மூன்று ஏக்கரா சிவப்புச் சோளமும் ஆறு ஏக்கரா கம்பும் புன்செய் நிலத்தில் பயிர் செய்திருக்கிறார்.

"எடுத்த காரியம் யாவினும் வெற்றி" என்பதை வாழ்க்கை இலட்சியமாக உடைய டாக்டர் ராஜன் விவசாயத் துறையிலும் வெற்றியடைந்திருக்கும் அதிசயத்தைப் பற்றிய கட்டுரையும், படங்களும் இந்த இதழில் வெளியாகியிருக்கின்றன.

சமீபத்தில் நடந்து முடிந்த தேர்தலில் சென்னை மேல் சட்ட சபைக்கு டாக்டர் ராஜன் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டது நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.



கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 34

# என்ன சேதி?

## அர்த்தம் என்ன?

இந்தியாவிலே பஞ்சம் வராமல் தடுப்பதற்குக் குறைந்த பட்சம் எவ்வளவு தானியம் வேண்டுமோ, அதைத்தான் நேசநாட்டு உணவு போர்டாரிடம் இந்தியப் பிரதிநிதிகள் கோரினார்கள்.

அப்படியிருக்கும்போது, இந்தியா கேட்டதில் அறுபத்து நான்கு சத விகிதத்தை மாத்திரம் நேசநாட்டு உணவு போர்டு அனுமதிக்கும் என்று எதிர் பார்ப்பதாக இந்திய சர்க்கார் உணவு மெம்பர் சர் ஜே. பி. ஸ்ரீவத்ஸவா சொல்லுகிறாரே, அதற்கு என்ன அர்த்தம்?

இந்த 64 சத விகித உணவுப் பொருள்களை வைத்துக்கொண்டு எத்தனை பேரைக் காப்பாற்ற முடியுமோ அத்தனை பேரைக் காப்பாற்றுங்கள்; பாக்கிப் பேர் செத்துப் போகட்டும் என்பதுதான்.

யுத்தத்தில் வெற்றி பெறுவதற்கு நேச நாடுகள் இந்தியாவின் ஒத்துழைப்பையும் உதவியையும் கோரின.

நாமும் நம்மாலான உதவியை எல்லாம் செய்தோம். நாம் கண்டறியாத நாஜி பூதத்தைக் கொல்வதற்காக நம்மிடம் இருந்ததையெல்லாம் யுத்த முயற்சி என்ற பெயரிலே அந்நிய நாடுகளுக்கு வெகு தாராளமாக வழங்கினோம்.

இன்று நாஜிஸத்தைக் காட்டிலும் பயங்கரமான பஞ்சம் இந்தியாவின்மேல் படையெடுத்து வரும்போது நேசநாடுகள் இந்தியாவுக்கு உதவி செய்யக் கடமைப் பட்டவை அல்லவா?

அந்த உதவியையும் நாம் இலவசமாகக் கேட்கவில்லை. பணம் கொடுத்துத்தான் தானியம் கேட்கிறோம். அதற்கும் நேச நாடுகள் முன்வரவில்லையானால், அவற்றை 'நேச நாடுகள்' என்று சொல்வதை விடச் 'சத்துரு நாடுகள்' என்று சொல்வது பொருத்தமாயிருக்குமல்லவா?

## அபாயம் நீங்கவில்லை!

ஈரான் விஷயத்தில் பிரிட்டனும் அமெரிக்காவும் பிடிவாதமாக இருந்ததன் விளைவாக ருஷ்யா இப்போது இறங்கி வந்திருக்கிறது.

ருஷ்யத் துருப்புகள் ஈரானிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக வாபஸாகிக் கொண்டிருக்கின்றனவாம்.

இன்னும் ஆறு வாரத்துக்குள் எல்லாத் துருப்புகளும் ஈரானை விட்டு வெளியேறி விடுமென்றும் தெரிகிறது.

ஆனால், பிரிட்டனும் அமெரிக்காவும் ருஷ்யாவை அத்துடன் விடவில்லை.

ஈரான் விஷயத்தை ஐக்கிய தேச மகா சபையின் செக்யூரிட்டி கௌன்ஸிலில் விவாதத்துக்கு எடுத்துக் கொள்வதற்காகத் துடித்துக் கொண்டிருக்கின்றன.

ரொம்ப சந்தோஷம். சமாதானத்துக்காக இத்தனை முயற்சி செய்யும் பிரிட்டிஷ்—அமெரிக்க நாடுகளுக்கு நம்முடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆனால் ஈரானிலிருந்து ருஷ்யத் துருப்புகள் வெளியேறுவதால் மட்டும் உலக சமாதானம் நிலைபெற்றதாகிவிடுமா?

ஒரு நாளும் இல்லை. இந்த பிரிட்டிஷ் அமெரிக்க முயற்சியின் பலனாக ருஷியாவின்மேல் ஏற்படக் கூடியதாக இருந்த ஒரு புகார் மாத்திரம் நிவர்த்தியாயிற்று.

ஆனால் உலக சமாதானத்துக்கு அபாயம் நீங்கிவிடவில்லை.

எகிப்து, ஈராக், பாலஸ்தீனம், இந்தியா, பர்மா, மலாய் முதலிய நாடுகளிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் வாபஸாகவேண்டும்.

ஸிரியா, இந்தோ சீனாவிலிருந்து பிரெஞ்சுத் துருப்புகள் வாபஸாக வேண்டும்.

சீனாவிலிருந்து அமெரிக்கத் துருப்புகள் பயணமாக வேண்டும்.

இதையெல்லாம் செய்யாத வரையில், உலக சமாதானத்துக்கு அபாயமும் இருந்து கொண்டு தானிருக்கும்.

# ஜின்னாவுக்குச் சர்வாதிகாரம் கிடைத்தால்?

காந்திஜியின் நல்ல வார்த்தைக்-
கும் காது கொடுக்க மாட்டார்.



காங்கிரஸ் தலைவர் ஆஸாத்துக்குப்
பென்ஷன் கொடுத்து அனுப்பி விடுவார்.




ஐந்தாம் படை முஸ்லிம்களிடமிருந்து
சரணாகதிக்குக் குறைந்து எதையும்
ஒப்புக்கொள்ள மாட்டார்.



தன்னுடைய காங்கிரஸ் எதிரிகளைப்
பேச வொட்டாமல் வாய்ப்பூட்டு போட்டு
விடுவார்.



-உம்மன்


எல்லைப்புறப் பட்டாணியர்களை நரகத்துக்கு
அனுப்பி விடுவார்.
நரகத்துக்-
குப் போ!
கபர்கான்


பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஆட்லியை
அவருடைய வார்த்தைகளை விழுங்-
கும்படி உத்தரவிடுவார்.
ஆட்லி


பிறகு மூன்று மந்திரிகள் தூது கோஷ்
யைத் தமது இஷ்டப்படி ஆட்டி
வப்பார்.


ஆனால், துரதிருஷ்டசாலி ஜின்னாவுக்கு
சர்வாதிகாரம் கிட்ட
வில்லையே?

# கள்ளே! ஒழிந்து போ! நிலவரியே! தொலைந்து போ!

சென்னை மாகாணத்து ஜனங்கள் தங்கள் கடமையை நிறைவேற்றி விட்டார்கள். காங்கிரஸுக்கு மகத்தான வெற்றியை அளித்து விட்டார்கள். மாகாண சட்டசபைகள் இரண்டுக்கும் காங்கிரஸ் நியமித்த அபேட்சகர்களையே பெருவாரியாகத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்திருக்கிறார்கள்.

இனி, காங்கிரஸ் தலைவர்களும் சட்டசபைப் பிரதிநிதிகளும் தங்களுடைய கடமையை நிறைவேற்ற வேண்டும். தேசமக்கள் தங்களிடம் காட்டியுள்ள நம்பிக்கையை அவர்கள் மெய்ப்படுத்த வேண்டும். காங்கிரஸின் கௌரவத்தையும் செல்வாக்கையும் சிதற விடாமல் காப்பாற்ற வேண்டும்.

இதெல்லாம் மந்திரி சபையின் அமைப்பைப் பொறுத்திருக்கிறது. மந்திரி சபையின் அமைப்பு தலைவர் தேர்தலை — அதாவது பிரதம மந்திரி நியமனத்தைப் பொறுத்திருக்கிறது.

எனவே, சுயநலத்தையும் சொந்த விருப்பு வெறுப்புகளையும் ஒதுக்கி வைத்துச் சட்டசபைக் காங்கிரஸ் பிரதிநிதிகள் இம்மாகாணத்தின் கௌரவத்தைக் காப்பாற்றக் கூடிய தலைவரைத் தங்களுக்குள் தேர்ந்தெடுக்க வேண்டும். ஜனங்களுக்கு நன்மையான காரியத் திட்டங்களை விரைவாக வகுத்துத் திறம்பட நடத்தி வைக்க வேண்டும்.

ஆனால் இதைப் பற்றியெல்லாம் நாம் கவலைப்பட அவசியம் இல்லை. கவலைப்பட வேண்டியவர்கள், மாகாண காங்கிரஸ் நிர்வாகிகள்; மேலேயுள்ள காரியக் கமிட்டித் தலைவர்கள். அவர்கள் வேண்டிய அளவு கவலை எடுத்துத் தங்கள் கடமையை நிறைவேற்றுவார்கள் என்று நாம் நம்பலாம். தக்க பிரதம மந்திரியைத் தேர்ந்தெடுத்துத் தக்க மந்திரி சபையையும் அமைப்பார்கள் என்றும் எதிர்பார்க்கலாம்.

அப்படி ஏற்படப் போகும் காங்கிரஸ் மந்திரி சபையார் முதன் முதலாகச் செய்யவேண்டிய காரியங்கள் இன்னவை என்பதை நாம் கவனிப்போம்.

எல்லாவற்றிலும் முதன்மையாகச் செய்யவேண்டிய காரியம் பூரண மதுவிலக்கு. அதாவது கள்ளு-சாராயக் கடைகளை மூடுதல்.

1921-ம் வருஷத்திலிருந்து மதுவிலக்கு காங்கிரஸின் முக்கிய திட்டமாயிருந்து வருகிறது. காங்கிரஸ் திட்டங்களுக்குள்ளே பாமர ஜனங்களின் மனதை உடனே கவர்ந்த திட்டம் மதுவிலக்குத் திட்டமே யாகும். பாமர ஜனங்களுக்கு, — ஏழை எளியவர்களுக்கு, — உழவும் தொழிலும் செய்யும் பாட்டாளி மக்களுக்கு, — உடனே பிரயோஜனமாகும் திட்டமும் மதுவிலக்குத் திட்டமே யாகும்.

எனவே, மது விலக்குத் திட்டத்தை எந்தக் காரணத்தைக் கொண்டும் தள்ளிப் போடுதல் காங்கிரஸுக்கு அழியாத பழியைத் தரும்; நம்பிக்கைத் துரோகமும் ஆகும்.

இதைத் தவிர, சென்ற காங்கிரஸ் மந்திரி சபை நடந்த போது பூரண மதுவிலக்குத் திட்டத்துக் கென்றே விதித்த விற்பனை வரியின் மூலம் ஏராளமான வருமானம் சர்க்காருக்குக் கிடைத்து வருகிறது.

எனவே, மதுவிலக்குத் திட்டத்தை உடனே அமுலுக்குக் கொண்டு வராமல் தள்ளிப் போடுதல் இரட்டை நம்பிக்கைத் துரோகமாகும்.

வரப் போகும் பஞ்சத்தை உத்தேசித்தும் கள்ளு சாராயக் கடைகளை உடனே மூட வேண்டும். பஞ்சகாலத்தில் ஏழை எளியவர்களைக் குடிக்கச் செய்து வருமானம் சம்பாதித்தல் மகா பாவம்.

1939-40ல் $3\frac{1}{2}$ கோடி ரூபாயாக இருந்த கலால் வரியை அட்வைஸரி சர்க்கார் ஆட்சியில் 13 கோடி ரூபாயாகப் பெருக்கி வைத்திருக்கிறார்கள்!

மாகாணம் முழுதும் பூரண விலக்குச் செய்தால் மேற்படி 13 கோடி ரூபாய் வருமானத்தையும் மாகாண சர்க்கார் இழந்தாக வேண்டி யிருக்கும்.

அடுத்தபடியாகக் காங்கிரஸ் மந்திரி சபையார் கவனம் செலுத்த வேண்டிய காரியம், "வருகிறேன், வரப்போகிறேன்" என்று பயமுறுத்திக் கொண்டிருக்கும் பஞ்சத்திலிருந்து மக்களைப் பாதுகாப்பதாகும்.

இதற்காக இந்திய சர்க்கார் செய்து வரும் முயற்சிகளைத் தவிர, சென்னை மாகாண அட்வைஸரி சர்க்காரும் பல முயற்சிகளை ஆரம்பித்திருக்கிறார்கள்.

ஐந்து வருஷமாய்ச் சேர்ந்திருக்கும் கையிருப்புத் தொகையிலிருந்து 9 கோடி ரூபாய் பஞ்ச நிவாரணத்துக்காக ஒதுக்கி வைத்திருக்கிறார்கள்.

தானிய ரேஷன் முறை, தானியக் கட்டாய சேகரம் முதலிய காரியங்களை நடத்தி வருகிறார்கள்.

கோடை காலத்தில் உணவுப் பயிர் சாகுபடி செய்ய ஏகராவுக்கு ரூ. 15 வீதம் நன்கொடை யளிப்பதாகச் சொல்லி யிருக்கிறார்கள்.*

இதையெல்லாம் செய்தவர்கள் பஞ்ச நிவாரணத்துக்கு அடிப்படையாகச் செய்ய வேண்டிய ஒரு முக்கியமான காரியத்தைச் செய்ய வில்லை.

மிராசுதாரர்கள் — குடியானவர்களின் தலைமீது பெருஞ் சுமையாக இருந்து அமுக்கி, விவசாய அபிவிருத்திக்குப் பெருந் தடையா யிருக்கும் நிலவரியை எடுக்க வில்லை.

இந்த வருஷ விளைச்சல் ரொம்பவும் பாழாய்ப் போனதினால்தான் பஞ்சம் எதிர்பார்க்கப் படுகிறது என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்.

ஆனாலும் இந்த வருஷத்தில் சென்னை சர்க்கார் வழக்கம்போல் 5 கோடி ரூபாய் சொச்சம் நில வரி வசூலித்திருக்கிறார்கள்! வருகிற வருஷத்துக்கும் அவ்வாறே வசூல் திட்டம் போட்டிருக்கிறார்கள்!

இந்த மடமையான செயலைக் காங்கிரஸ் சர்க்கார் ஏற்பட்டவுடனே முதல் காரியமாக ரத்து செய்ய வேண்டும்.

விளைச்சல் அடியோடு பாழாய்ப் போன தஞ்சாவூர் ஜில்லாவில், "நாலணாவுக்குக் குறைவான மகசூல் விளைந்த நிலங்களுக்கு மட்டும் நிலவரி வஜா செய்யப்படும்" என்று சொல்லி யிருக்கிறார்களாம்.

நிலத்தில் விளைய வேண்டிய 'முழு மகசூலும் விளைந்தால் அதை ஒரு ரூபாய் மகசூல்' என்று சொல்வது மரபு. பாதி விளைச்சலை 'எட்டணா மகசூல்' என்றும், கால் பங்கு விளைச்சலை 'நாலணா மகசூல்' என்று சொல்லுவார்கள்.

நிலத்தில் சாதாரணமாய் ஒரு ரூபாய் விளைச்சல் விளைந்தால், அதில் பாதி சர்க்கார் வரிக்கும், கால் பங்கு சாகுபடிச் செலவுக்கும் போகும். பாக்கி கால் பங்கு தானியந்தான் குடியானவனுடைய சாப்பாட்டுக்கு மிஞ்சும்.

பெரிய மிராசுதார்களா யிருந்தால், ஒரு ரூபாய் விளைச்சலில் மேற்கண்ட நில வரி, விவசாயச் செலவுகள் எல்லாம் போக, ஒரு அணா விளைச்சலை லாபமாய்ப் பெறுவார்கள்.

அப்படியிருக்க, நாலணா விளைவுக்குக் குறைந்தால் தான் நிலவரி வஜா என்றால், எட்டணா விளைவு நிலங்களின் கதி என்ன? விளைந்தது பூராவையும் நிலவரிக்கு அழுதுவிட்டால், குடியானவன் என்னத்தைச் சாப்பிடுவது? அடுத்த வருஷம் அவன் எப்படிச் சாகுபடி செய்வது? விதை, தழை, கூலி முதலிய விவசாயச் செலவுகளுக்கு எங்கே போவது?

இந்த வருஷத்துப் பஞ்சம் போதாதென்று அடுத்த வருஷத்துப் பஞ்சத்துக்கும் திறமையான ஏற்பாடு செய்வதாக அல்லவா காண்கிறது!

ஆம்; இந்த மடமையை உடனே நிவர்த்திக்க வேண்டும். இந்த வருஷத்திலும் வருகிற வருஷங்களிலும் சென்னை மாகாணம் பஞ்சத்திலிருந்து தப்ப வேண்டுமானால் நிலவரி முழுவதையும் நிரந்தரமாக எடுத்து விட வேண்டும்.

மற்ற சொத்து சுதந்திர முள்ளவர்களிடம் என்ன முறையில் வரிபோட்டு வசூலிக்கிறார்களோ, அதே முறையில் தான் நிலச் சொத்துக்கும் வரி வசூலிக்க வேண்டும். அதாவது, வீட்டு வாடகையிலிருந்தோ, லேவாதேவித் தொழிலிருந்தோ, கம்பெனியின் பங்குகளிலிருந்தோ, வியாபாரத்திலிருந்தோ, கைத்தொழிலிருந்தோ, பணம் சம்பாதிப்பவர்களிடம் எந்த முறையில் வரி வசூலிக்கிறார்கள்? இத் துறைகளில் வருஷம் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேலே வருமானம் உள்ளவர்களிடந் தான் வரி வசூலிக்கப்படுகிறது. வருமானம் அதிகமாக ஆக, வரி விகிதமும் அதிகமாகிறது.

அந்த முறையிலே தான் நில வருமானம் அதாவது விவசாய வருமானத்துக்கும் வரி வசூலிக்கவேண்டும்.

---

* கோடை காலத்தில் தண்ணீர் இறைத்துச் சாகுபடி செய்ய ஏகராவுக்கு ரூ. 250 செலவாகும் என்றும், நன்றாய் விளைந்தால் ரூ. 150 வருமானம் வருமென்றும், ரூ. 100 நஷ்டம் ஆகுமென்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்த நிலைமையில் ஏகராவுக்கு ரூ. 15 நன்கொடை அளிப்பதனால் என்ன பலன் ஏற்படப் போகிறதோ, ஆண்டவனே அறிவார்!

ஆயிரம் ரூபாய்க்குமேல் விவசாய வருமானம் உள்ளவர்களிடம் மட்டுந்தான் வரி வசூலிக்கலாம். அதுவும் வருமான வரி விகிதப்படிதான் வசூலிக்கலாம்.

இந்த நிலவரிச் சீர்திருத்தம், தாற்காலிக பஞ்ச நிவாரணத்துக்கும் அவசியமானது; வருங்காலத்தில் விவசாயத்தை வளர்த்துப் பஞ்சத்தைத் தடுப்பதற்கும் அவசியமானது.

காங்கிரஸ் மந்திரிகள் மேற்படி சீர்திருத்தத்தைச் செய்தால், நிலவரி ஐந்து கோடி சொச்சத்தையும் அடியோடு தள்ள வேண்டியிருக்கும்; அதற்குப் பதிலாக விவசாய வருமான வரி ஒரு கோடி அல்லது ஒன்றரைக் கோடி மட்டும் வரலாம்.

* * *

மது விலக்கு, நிலவரி தள்ளுபடி ஆகிய இரண்டு இனங்களிலும் சென்னை சர்க்காருக்கு 16 அல்லது 17 கோடி ரூபாய் வருமானம் குறையும்.

இந்தப் பெரிய தொகையை எப்படி ஈடு செய்வது என்ற கேள்வி எழுகின்றது.

தற்போதைய கால நிலைமையில், செலவிலே சிக்கனம் செய்தல் அவ்வளவு சுலபமான காரியமல்ல.

சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தில் கையை வைப்பதற்கில்லை. கீழ் வரிசையிலுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் கூட்டித் தரவேண்டியிருக்கலாம்.

புதிய வரி எதுவும் போடுவதற்கில்லை. புதியவரி போட்டால் ஜனங்கள் தாங்க மாட்டார்கள்.

பின்னர், 17 கோடி ரூபாயை எப்படி ஈடு செய்வது?

அதற்கு வழி இருக்கிறது.

உலகத்தில் பல தேசங்களின் சர்க்கார்கள் கையாளும் வழிதான்.

அதாவது, சில முக்கியமான பெரிய தொழில்களை மாகாண சர்க்கார் எடுத்துக் கொண்டு நடத்த வேண்டும்.

தற்போது இந்திய சர்க்கார் ரயில்வே கம்பெனிகளை நடத்துகிறார்கள்; தபால் தந்தி இலாக்காக்களை நடத்துகிறார்கள்.

மேற்படி இரண்டு தொழில்களிலும் இந்திய சர்க்காருக்கு சுமார் 100 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கிறது.

அதுபோல், மாகாண காங்கிரஸ் சர்க்காரும் சில முக்கிய தொழில்களை எடுத்துக் கொண்டு நடத்தவேண்டும்.

காங்கிரஸ் சர்க்கார் உடனே எடுத்துக் கொண்டு நடத்தக் கூடிய இரண்டு தொழில்கள் இருக்கின்றன.

நூல் ஆலைகளையும், ஜவுளி ஆலைகளையும் சென்னை சர்க்கார் எடுத்து நடத்தினால், வருஷத்தில் குறைந்தது 15 கோடி ரூபாய் வரும்.

"கள்ளே! ஒழிந்து போ!" என்று சொல்லி வழி அனுப்பலாம்.

மாகாண மெங்கும் ஓடும் மோட்டார் பஸ்களை எடுத்துக்கொண்டு சர்க்காரே நடத்தினால், குறைந்தது நாலு கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும்.

"நிலவரியே! தொலைந்து போ!" என்று தலை முழுகி விடலாம்.

நூல் ஜவுளி ஆலைகள், பஸ் போக்குவரவு—ஆகிய இந்த இரண்டு துறைகளிலும் கிடைக்கும் கோடிக் கணக்கான ரூபாய் லாபம் இப்போது ஒரு சில பணக்கார முதலாளிகளுக்குப் போய்க் கொண்டிருக்கிறது.

பொது நன்மையை முன்னிட்டு, தேசத்தின் அவசியத்தை முன்னிட்டு மேற்படி இரு பெருந் தொழில்களையும் சர்க்கார் எடுத்துக் கொண்டு பொது மக்களின் உடைமையாக்க வேண்டும்.

காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்டதும் மேற்சொன்ன நாலு காரியங்களையும் உடனே தொடங்கித் திறமையாக நடத்தி வெற்றி பெறுவது அவசியத்திலும் அவசியமாகும்.

அப்படிச் செய்யாவிட்டால் காங்கிரஸ் மந்திரி சபை பல விதங்களிலும் அபகீர்த்திக்கு உள்ளாக நேரும்.



## நமது அநுதாபம்

புதுக்கோட்டை சமஸ்தானத்தில் காட்டுலாகா தலைவராயிருந்தவரும் பல உத்தம குணங்கள் படைத்தவருமான ஸ்ரீ வி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் தமது 65-வது வயதில் சென்ற மார்ச்சு மாதம் 20-ந் தேதி காலமானது அறிந்து வருந்துகிறோம். அப்பெரியாரின் நாலு புதல்வர்களில் மயிலை சங்கீத சபைக் காரியதரிசியும் டெக்ஸ்டைல் கமிஷனரின் பர்ஸனல் அஸிஸ்டெண்டுமான ஸ்ரீ என். சத்தியமூர்த்தி அவர்களும் ஒருவர். ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களுக்கும், அவருடைய சகோதரர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# சிவகாமியின் சபதம்

## கல்கி

### அத்தியாயம் 31

### இதயக் கனல்

சொல்ல முடியாத வியப்புடனே தம்மைப் பார்த்த சிவகாமியை, சர்ப்பத்தின் கண்களை யொத்த தமது காந்த சக்தி வாய்ந்த கண்களினாலே நாகநந்தி யடிகள் சற்று நேரம் உற்றுப் பார்த்தார்.

“சிவகாமி! நான் சொல்வதை நீ நம்பவில்லையா? என் நெஞ்சைத் திறந்து உனக்கு நான் காட்டக் கூடுமானால்.— இந்தக் கடின இதயத்தைப் பிளந்து இதற்குள்ளே இரவும் பகலும் ஜ்வாலை விட்டு எரிந்து கொண்டிருக்கும் தீக் கனலை உனக்கு நான் காட்ட முடியுமானால்......” என்று சொல்லிக் கொண்டே பிக்ஷு படீர், படீர் என்று தன் மார்பில் இரண்டு தடவை குத்திக் கொண்டார். உடனே அவருடைய இடுப்பு வஸ்திரத்தில் செருகிக் கொண்டிருந்த சிறு கத்தியை எடுத்து அதன் உறையைச் சடாரென்று கழற்றி எறிந்து விட்டுத் தம் மார்பிலே அக்கத்தியால் குத்திக் கொள்ளப் போனார்.

அதைப் பார்த்த சிவகாமி அளவில்லாத பீதியையும் பயங்கரத்தையு மடைந்த போதிலும் செயலற்று நின்று விடாமல் சட்டென்று அவருடைய கையைப் பிடித்துக் கத்தியால் குத்திக் கொள்ளாமல் தடுத்தாள்.

சிவகாமி தன் கரத்தினால் நாகநந்தியின் கையைப் பிடித்திருந்த சொற்ப நேரத்தில் இரண்டு அதிசயமான அநுபவங்களை அடைந்தாள். நாகநந்தியின் கரமும் அவருடைய உடல் முழுதும் அப்போது கிடு கிடுவென்று நடுங்குவதை உணர்ந்தாள். ஒன்பது வருஷத்துக்கு முன்னால் புத்த பிக்ஷுவைச் சிவகாமி தன்னுடைய தந்தையை யொத்தவராய்க் கருதியிருந்த போது, சில சமயம் அவருடைய கரங்களைத் தற்செயலாகத் தொட்டுப் பார்க்க நேர்ந்ததுண்டு. அப்போது அவளுடைய மனதில், “இது என்ன வஜ்ர சரீரம்? இவருடைய தேகமானது கேவலம் சதை, இரத்தம், நரம்பு, தோல் இவற்றின் சேர்க்கையே பெருமல் முழுதும் எலும்பினால் ஆனதாக வல்லவா தோன்றுகிறது? எப்பேர்ப்பட்ட கடின தவ விரதங்களை அனுஷ்டித்து இவர் தம் தேகத்தை இப்படிக் கெட்டிப் படுத்தியிருக்க வேண்டும்?” என்று எண்ண மிட்டதும் உண்டு. அதே புத்த பிக்ஷுவின் தேகம் இப்போது பழைய கெட்டித் தன்மையை இழந்து தள தளத்த மிருதுத் தன்மையை அடைந்திருந்ததைச் சிவகாமி உணர்ந்து அதிசயித்தாள்.

நாகநந்தி சற்று நேரம் கையில் பிடித்த கத்தியுடன் உடல் கிடுகிடு வென்று நடுங்கச் சிவகாமியைத் திரு திருவென்று விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு சுய உணர்வு திடீரென்று வந்தவரைப்போல் கத்தியைத் தூரத்தில் விட்டெறிந்தார். உடனே சிவகாமியும் அவருடைய கையை விட்டாள்.

“சிவகாமி! திடீரென்று அறிவு கலங்கி மெய்மறந்து போனேன்! சற்று முன் உன்னிடம் என்ன சொன்னேன், எதற்காக இந்தக் கத்தியை எடுத்தேன் என்பதைக் கொஞ்சம் ஞாபகப்படுத்துவாயா?” என்று புத்த பிக்ஷு கேட்டதற்குச் சிவகாமி, “சுவாமி! சற்று முன்னால் தாங்கள் புத்த பிக்ஷு விரதத்

தைக் கைவிடப் போவதாகவும், சிம்மாசனம் ஏறி இராஜ்யம் ஆளப் போவதாகவும் சொன்னீர்கள்......" என்று கூறிவிட்டுத் தயங்கினாள்.

"ஆம், சிவகாமி, நான் கூறியது உண்மை. அதற்காகவே நான் அஜந்தாவுக்குப் போகிறேன். முப்பத்தைந்து வருஷத்துக்கு முன்னால் அஜந்தா நதிக் கரையில் பிக்ஷு விரதம் ஏற்றேன். அதே நதியில் அந்த விரதத்துக்கு ஸ்நானம் செய்துவிட்டு வரப் போகிறேன். அஜந்தா சங்கிராமத்தின் தலைவராகிய எந்தப் பூஜ்ய புத்த குருவினிடம் தீக்ஷை பெற்றேனோ, அவரிடமே இப்போது விடுதலை பெற்று வரப்போகிறேன். அது உனக்குச் சம்மதந்தானே?" என்றார் நாகநந்தியடிகள். சிவகாமி, இன்னதென்று விவரந் தெரியாத பயத்தினால் பீடிக்கப்பட்டவளாய் "சுவாமி! இது என்ன பேச்சு? இது என்ன காரியம்? இத்தனை வருஷ காலமாக அனுசரித்த புத்த தர்மத்தைத் தாங்கள் எதற்காகக் கைவிட வேண்டும்? அதனால் தங்களுக்கு உலக நிந்தனை ஏற்படாதா? இத்தனை நாள் அனுஷ்டித்த விரதம், தவம் எல்லாம் நஷ்டமாகுமே? எந்த லாபத்தைக் கருதி, என்ன நோக்கத்துக்காக இப்படிச் செய்யப் போகிறீர்கள்!" என்று கேட்டாள்.

இப்படிக் கேட்டபோதே, அவளுடைய உள்ளுணர்ச்சியானது இந்தக் கேள்வியெல்லாம் தான் கேட்பது பெரிய தவறு என்றும், அந்தத் தவறினால் பிக்ஷு விரித்த வலையிலே தான் விழுந்து விட்டதாகவும் உணர்த்தியது.

"எதற்காக, என்ன லாபத்துக்காக, என்ன நோக்கத்தை முன்னிட்டு என்று கேட்கிறாய்?" என்று பிக்ஷு திருப்பிக் கேட்டுவிட்டு, "ஹா ஹா ஹா" என்று உரத்துச் சிரித்தார்.

"உனக்குத் தெரியவில்லையா? உண்மையாக இன்னும் தெரியவில்லையா! அப்படியானால், சொல்கிறேன் கேள்! முப்பத்தைந்து வருஷ காலமாக அனுஷ்டித்த பிக்ஷு விரதத்தை நான் கைவிடப் போவது உனக்காகத்தான், சிவகாமி, உனக்காகத்தான்! நானே அஜந்தாவில் நான் சம்பிரதாயமாக, உலகம் அறிய, குருவினிடம் அனுமதி பெற்று விரதத்தை விடப் போகிறேன். ஆனால் விரத பங்கம் முன்னாலேயே நேர்ந்து விட்டது; பல வருஷங்களுக்கு முன்னாலேயே நேர்ந்துவிட்டது. என்றைய தினம், உன்னுடைய தகப்பனார் ஆயனரின் அரண்ய வீட்டில், அற்புத சிலைகளுக்கு மத்தியிலே உயிருள்ள சிலையாக நின்ற உன்னைப் பார்த்தேனோ, அன்றைக்கே என் விரதத்துக்கும் பங்கம் வந்துவிட்டது. ஆனால் அதற்காக நான் வருத்தப்படவில்லை. உன்னுடனே ஒரு நாள் வாழ்வதற்காகப் பதினாயிரம் வருஷம் நரகத்திலே கிடக்க வேண்டுமென்றால், அதற்கு நான் ஆயத்தமாயிருக்கிறேன். உன்னோடு இந்த ஒரு ஜன்மத்தில் வாழ்வதற்காகப் பதினாயிரம் ஜன்மங்களில் புழுவாய்க் கிடக்க வேண்டுமானால் அதற்கும் ஆயத்தமாயிருக்கிறேன். உன்னுடைய அன்பை ஒரு கண நேரம் பெறும் பாக்கியத்துக்காக என்றென்றைக்கும் மோட்சத்தை இழந்துவிட வேண்டும் என்றால் அதற்கும் சித்தமாயிருக்கிறேன்......"

சிவகாமி பயந்து நடுங்கினாள். இத்தனை நாளும் அவள் மனதிற்குள்ளே, — இதய அந்தரங்கத்துக்குள்ளே, — புதைந்து கிடந்த சந்தேகம் இன்று உண்மையென்று தெரியலாயிற்று. ஆனால் இந்தக் கள்ள பிக்ஷு இத்தனை நாளும் ஏன் இதையெல்லாம் தம் மனதிற்குள்ளே மறைத்து வைத்துக் கொண்டிருந்தார்! இத்தனை காலமும் தன்னைத் தொந்தரவு செய்யாமல், எந்த விதத்திலும் வற்புறுத்தாமல், சுதந்திரமாக விட்டு வைத்திருந்ததேன்? அவள் மனதில் எழுந்த மேற்படி கேள்விக்குத் தட்சணமே மறுமொழி கிடைத்தது.

"சிவகாமி! என்னுடைய ஆத்மாவை நான் காப்பாற்றிக் கொள்வதற்கும், உன்னுடைய வாழ்க்கைச் சுகத்தை நீ பாதுகாத்துக் கொள்வதற்கும் ஒரு சந்தர்ப்பம் ஒன்பது வருஷத்துக்கு முன்னால் ஏற்பட்டது. மாமல்லன் இங்கு வந்து உன்னை அழைத்தபோது நீ அவனுடன் போயிருந்தாயானால், அல்லது உன்னை அவனிடம் சேர்ப்பிப்பதற்கு எனக்காவது ஒரு சந்தர்ப்பம்

கொடுத்திருந்தாயானால், நான் என் விரதத்தை ஒரு வேளை காப்பாற்றிக் கொண்டிருப்பேன். நீயும் உன் வாழ்க்கை இன்பத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் நீ என் உண்மையான நோக்கத்தைத் தெரிந்து கொள்ளாமல் அநாவசியமாகச் சந்தேகித்து விஷக் கத்தியை என் முதுகின்மேல் எறிந்து காயப்படுத்தினாய். அப்போது அந்த விஷக் கத்தி என்னைக் கொல்லவில்லை. ஆனால் அதே கத்தியானது இப்போது என்னைத் தாக்கினால் ஒரு நாழிகை நேரம் கூட என் உயிர் நிலைத்திராது. சிவகாமி! சற்று முன்னால் என் கரத்தை நீ பிடித்த போது உன் மனதில் ஒரு சந்தேகம் உதித்தது. ஒன்பது வருஷத்துக்கு முன்னால் இரும்பையும் கல்லையும் ஒத்துக் கெட்டியாயிருந்த என் கை இப்போது இவ்வளவு மிருதுத் தன்மை அடைந்திருப்பதைக் குறித்து நீ ஆச்சரியப்பட்டாய். இந்த மாறுதலுக்குக் காரணம் நீ தான், சிவகாமி! கடுமையான தவ விரதங்களையும் ஹட யோக முறைகளையும் அனுசரித்து என் தேகத்தை அவ்வாறு கெட்டிப் படுத்திக் கொண்டிருந்தேன். வெகு காலம் விஷ மூலிகைகளை உட்கொண்டு என் தேகத்தில் ஓடிய இரத்தத்தை விஷமாகச் செய்து கொண்டிருந்தேன். அந்தக் காலத்தில் என்னை எப்பேர்ப்பட்ட கொடிய விஷ நாகம் கடித்தாலும், கடித்த மறு கணம் அந்த நாகம் செத்துப் போகுமே தவிர எனக்கு ஒரு தீங்கும் நேராது. என்னுடைய உடம்பின் வியர்வை நாற்றம் காற்றிலே கலந்து விட்டால், அதன் கடுமையைத் தாங்க முடியாமல் சுற்று வட்டாரத்திலுள்ள விஷப் பாம்புகள் எல்லாம் பயந்து நாலா திசையிலும் சிதறி ஓடும். இதைப் பல சமயங்களில் நீயே நேரில் பார்த்திருக்கிறாய்!''...... என்று நாகநந்தி கூறிய போது, இரண்டு பேருடைய மனதிலும் பத்து வருஷங்களுக்கு முன்னால் மண்டபப் பட்டுக் கிராமத்தில் வெண்ணிலா விரிந்த ஓர் இரவிலே நடந்த சம்பவங்கள் ஞாபகத்தில் வந்தன.

"அப்பேர்ப்பட்ட இரும்பையொத்திருந்த என் தேகத்தை மாற்று மூலிகைகளினாலும் மற்றும் பல வைத்திய முறைகளை அனுசரித்தும் இப்படி மிருதுவாகச் செய்து கொண்டேன். என் இரத்தத்தில் கலந்திருந்த விஷத்தையும் முறிவு செய்தேன். சென்ற ஒன்பது வருஷமும் இந்த முயற்சியிலே தான் ஈடுபட்டிருந்தேன். இடையிடையே உன்னைப் பலநாள் நான் பாராமலிருந்ததின் காரணமும் இது தான். சிவகாமி! முப்பது பிராயத்து இளைஞனைப்போல் இன்று நான் இல்வாழ்க்கை நடத்துவதற்குத் தகுந்தவனாயிருக்கிறேன். இத்தனைக்கும் பிறகு நீ என்னை நிராகரிக்க முடியாது; ஒருநாளும் நிராகரிக்க முடியாது. அப்படி நிராகரித்தாயானால் அதன் மூலம் எனக்கு நீ அளிக்கும் துன்பத்துக்குப் பரிகாரமாக நூறு நூறு ஜன்மங்களில் நீ பிராயச்சித்தம் செய்து கொள்ளும்படியிருக்கும்! அப்போதுங்கூட உன்னுடைய பாவம் தீர்ந்துவிட்டதாகாது!......"

சிவகாமியின் தலை வெடித்து விடும் போலிருந்தது. தன் முன்னால் பிக்ஷு உட்கார்ந்து மேற்கண்டவாறு பேசியதெல்லாம் ஒரு வேளை சொப்பனமாயிருக்கலாம் என்று ஒரு கணம் எண்ணினாள். அந்த எண்ணத்தினால் ஏற்பட்ட ஆறுதலும் சந்தோஷமும் மறு கணமே மாயமாய் மறைந்தன. இல்லை, இதெல்லாம் சொப்பனமில்லை; உண்மையாகவே தன் கண் முன்னால் நடக்கும் பயங்கரமான நிகழ்ச்சிதான்.

இரத்தம் போல் சிவந்த கண்களைக் கொட்டாமல் புத்தபிக்ஷு தன்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பது இதோ தன் எதிரில் உண்மையிலே நடக்கும் சம்பவந்தான்.

அபாயம் நெருங்கியிருப்பதை உணர்ந்ததும் சிவகாமியின் உள்ளம் தெளிவடைந்தது. இந்தக் கொடிய பைத்தியக்காரனிடமிருந்து தப்புவதற்கு வேறு வழியில்லை. வணங்கி வேண்டிக் கெஞ்சிக் கூத்தாடி எப்படியாவது கொஞ்சம் அவகாசம் பெற்றுக் கொள்ள வேண்டும். கடவுள் அருள் இருந்தால் இந்த வெறிகொண்ட பிக்ஷு அஜந்தாவிலிருந்து திரும்புவதற்குள் மாமல்லர் வந்து தன்னை விடுதலை செய்து கொண்டு போவார். இல்லாவிடில் வேறு ஏதேனும் யுக்தி

செய்ய வேண்டும். மூற்றத்துக் கிணறு இருக்கவே இருக்கிறது......

எனவே, பிக்ஷுவிடம் மன்றுடி வேண்டிக் கொள்வதற்காகச் சிவகாமி வாய் திறந்தாள்.

பிக்ஷு அதைத் தடுத்து "வேண்டாம், சிவகாமி! இன்றைக்கு நீ ஒன்றுமே பேசவேண்டாம். அவசரப்பட்டு எனக்கு மறுமொழி சொல்ல வேண்டாம் அஜந்தா போய்வந்த பிறகே உன்னிடம் இதைப்பற்றியெல்லாம் பிரஸ்தாபிக்க வேண்டுமென்று நான் எண்ணியிருந்தேன். ஆனால், வாதாபிக்கு வெளியே இன்று இரவு நாங்கள் தங்குவதற்குரிய இராஜாங்க விடுதியை அடைந்ததும், உன்னிடம் என் மனதைத் திறந்து காட்டி விட்டுப் போவதுதான் உசிதம் என்றும், எல்லா விஷயங்களையும் நன்றாக யோசித்து முடிவு செய்ய உனக்குப் போதுமான அவகாசம் கொடுக்க வேண்டும் என்றும் முடிவு செய்து கொண்டு திரும்பி வந்தேன். சிவகாமி! உன்னை நான் வற்புறுத்தப் போவதில்லை. பலவந்தப் படுத்தப் போவதில்லை. உனக்கு இஷ்டமில்லாத காரியத்தை ஒரு நாளும் செய்யச் சொல்ல மாட்டேன். ஆனால் நான் சொல்ல வேண்டியதை மட்டும் சொல்லி விடுகிறேன். ஒரே மூச்சில் இப்போதே சொல்லி விடுகிறேன். சற்றுப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிரு. நான் அஜந்தாவிலிருந்து திரும்பி வந்த பிறகு நீ உன்னுடைய தீர்ப்பைச் சொல்லலாம்."

பிக்ஷுவின் இந்த வார்த்தைகள் சிவகாமிக்கு ஒருவாறு ஆறுதல் அளித்தன. அவளுடைய பீதியும் படபடப்பும் ஓரளவு குறைந்தன.

நாகநந்தி ஆரம்பத்திலிருந்து மறுபடியும் கதையை ஆரம்பித்தார். அஜந்தா குகைச் சுவரில் தாம் கண்டநடன சித்திரம் தம் இளம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது பற்றிக் கூறினார். பிறகு, தாம் புலிகேசியைச் சந்தித்தது பற்றியும், அவனிடம் தாம் கொண்ட இணையில்லா சகோதர வாஞ்சையைப் பற்றியும் சொன்னார். புலிகேசிக்குத் தாம் கொடுத்த வாக்குறுதியைப் பற்றியும், அவனுக்காகத் தாம் செய்த தியாகங்களைப் பற்றியும் அநுபவித்த கஷ்டங்களைப் பற்றியும் கூறினார்.

"சிவகாமி! அப்போதெல்லாம் நான் முதலில் என் சகோதரனுக்காகவும் அடுத்தபடியாகச் சளுக்க சாம்ராஜ்யத்துக்காகவுமே உயிர் வாழ்ந்தேன். வடக்கே ஹர்ஷனால் புலிகேசிக்கு ஏற்பட்ட தடைக்குத் தெற்கே ஈடு செய்து விடுவது, பல்லவ — பாண்டிய வம்சங்களை அடியோடு அழித்துத் தென்னாடு முழுவதையும் சளுக்க சாம்ராஜ்யத்தின் கீழ்க் கொண்டு வருவது என்ற திட சங்கல்பத்துடன் தெற்கு நோக்கிப் புறப்பட்டேன். அதற்கு வேண்டிய எல்லா அநுகூலங்களும் இருந்தன. என்னுடைய இலட்சிய சித்திக்குப் பரம விரோதியாக நீ என் முன்னே எதிர்ப்பட்டாய். எந்த நேரத்தில் உன் தந்தையின் அரண்ய வீட்டில் உன்னை நான் பார்த்தேனோ, அதே நேரத்தில் என்னுடைய இதயத்திலிருந்து என் சகோதரனையும் சளுக்க சாம்ராஜ்யத்தையும் அப்புறப்படுத்தி விட்டு அவர்கள் இருந்த இடத்தை நீ ஆக்கிரமித்துக் கொண்டாய். அந்தக் கணத்தில் என் பிக்ஷு விரதம் பங்கம் அடைந்தது. அதே கணத்தில் சளுக்க சாம்ராஜ்யத்துக்கும் தடை ஏற்பட்டது. அது முதல் என்னுடைய யோசனைகள், ஏற்பாடுகள் எல்லாம் தவறாகவே போய்க் கொண்டிருந்தன. அந்தத் தவறுகள் காரணமாகவே வாதாபி சக்கரவர்த்தியின் தென்னாட்டுப் படையெடுப்பு நிஷ்பிரயோஜனமாயிற்று.........

"ஆகா! அந்தக் காலத்தில் நான் அநுபவித்த சொல்லொணாத மனவேதனையை மட்டும் நீ அறிந்தாயானால், உன் இளகிய நெஞ்சம் கரைந்து உருகி விடும். ஒரு பக்கத்தில் உன் பேரில் எனக்கு ஏற்பட்டிருந்த காதலாகிய கனல் என் நெஞ்சைத் தகித்துக் கொண்டிருந்தது. அந்தக் காதலை நான் வெளியிடக்கூடாதவனாயிருந்தபடியால் அதன் தாபஜ் ஜுவாலை ஒன்றுக்கு நூறு மடங்கு சக்தியுடன் என் உள்ளத்தில் கொழுந்துவிட்டெரிந்தது! அதே சமயத்தில் உன்னைச் சேர்ந்தவர்கள், உன்னோடு பழகியவர்கள், உன்னுடைய அன்புக்குப்

பாத்திரமானவர்கள் மீது எனக்கேற்பட்ட அளவில்லாத அசூயை பெரு நெருப்பாக என் உடலை எரித்தது. சிவகாமி! அப்போதெல்லாம் என் நெஞ்சில் நடந்து கொண்டிருந்த தேவாசுர யுத்தத்துக்குச் சமமான போராட்டத்தை நீ அறிந்தாயானால், பெரிதும் பயந்து போயிருப்பாய். ஒரு சமயம் உன்னைச் சேர்ந்தவர்கள் எல்லாரையும் கொன்று விடவேண்டும் என்று எனக்குத் தடுக்க முடியாத ஆத்திரம் உண்டாகும். ஆயினும் பின்னால் உனக்கு அது தெரிந்துவிட்டால் உன்னுடைய அன்பை என்றென்றைக்கும் இழந்துவிட நேரிடுமே என்ற பயம் என்னைக் கோழையாக்கியது. மாமல்லனையும் மகேந்திர பல்லவனையும் கொல்லுவதற்கு எனக்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் வாய்த்தன. ஆனால் ஒவ்வொரு சமயமும் 'உனக்குத் தெரிந்து விட்டால்?......' என்ற நினைவு என்னைத் தடுத்தபடியால் அவர்கள் தப்பிப் பிழைத்தார்கள்.......

"பரஞ்சோதி காஞ்சியில் பிரவேசித்த அன்று உன்னை மதயானை தாக்காமல் காப்பாற்றினான் அல்லவா? அந்தக் காரணத்துக்காகவே அவனை அன்றிரவு நான் சிறையிலிருந்து தப்புவித்து உன் வீட்டுக்கு அழைத்து வந்தேன். ஆனால், அவனுக்கு நீ நன்றி செலுத்துவதைப் பார்க்க என்னால் சகிக்க முடியவில்லை. ஆகையால் அவனிடம் உடனே ஓலை கொடுத்து என் சகோதரனிடம் அனுப்பச் செய்தேன். அதன் காரணமாக எத்தனை எத்தனையோ விபரீதங்கள் பின்னால் நேர்ந்து விட்டன. கலைவாணி! உன் தந்தை ஆயனருக்கு உன்னிடமுள்ள செல்வாக்கைப் பார்த்துக்கூட நான் அசூயை அடைந்தேன். ஆயினும் உன்னைப் பெற்ற புண்ணியவான் என்பதற்காக அவரை வாளால் வெட்டப் போன வீரனின் கையைப் பிடித்துத் தடுத்து அவர் உயிரைக் காப்பாற்றினேன். அது முதல் உன் தந்தையைக் காப்பாற்றிக் கொடுத்ததே என்ற காரணத்துக்காக இந்தக் கையை வாழ்த்திக் கொண்டிருக்கிறேன்!......"

இதைக் கேட்ட சிவகாமியின் நெஞ்சம் உண்மையிலேயே இளகித்தான் விட்டது. இந்தப் புத்த பிக்ஷு இரக்கமற்ற ராட்சதனா யிருக்கலாம்; இவருடைய இருதயம் பைசாசத்தின் இருதயமா யிருக்கலாம்; இவருடைய தேகத்தில் ஓடும் இரத்தம் நாக சர்ப்பத்தின் விஷங் கலந்த இரத்தமாயிருக்கலாம்; ஆனாலும் இவர் என் பேரில் கொண்ட ஆசையினால் என் தந்தையின் உயிரைக் காப்பாற்றினார் அல்லவா?...... இவ்விதம் எண்ணிய போது பிக்ஷுவின் பேரில் அவளுக்கிருந்த குரோதம், அருவருப்பெல்லாம் மாறி, அவரிடம் இரக்கமும் விசுவாசமும் உண்டாயின.

சிவகாமியின் மனோநிலையை ஒருவாறு அறிந்து கொண்ட புத்த பிக்ஷு மேலும் கூறினார்:—

"கேள், சிவகாமி! உன்னைப் பெற்றவர் என்பதற்காக ஆயனரைக் காப்பாற்றினேன் அல்லவா? உன்னை விரோதிப்பவர்களை எப்படிப் பழி வாங்குவேன் என்பதற்கும் ஓர் உதாரணம் சொல்கிறேன். இந்த வாதாபியில் நீ எவ்வித அபாயமும் இன்றி நிர்ப்பயமாக இத்தனை காலமும் வாழ்ந்து வருகிறாயல்லவா? இதற்குக் காரணம் என்னவென்று ஒருவேளை நீ ஊகித்திருப்பாய். நீ என்னுடைய பாதுகாப்பில் இருக்கிறாய் என்று எல்லாருக்கும் தெரியுமாதலால்தான், யாருமே உன் அருகில் நெருங்குவதில்லை. இதைக் குறித்து இந்நகரத்து அரண்மனையில் ஒரு பெண்ணுக்கு அசூயை உண்டாயிற்று. அவள் பட்டத்து ராணியின் சகோதரி. விஷம புத்தியுள்ள அந்தப் பெண் என்னைத் தன்னுடைய மோக வலையில் ஆழ்த்துவதற்கு மிக்க பிரயத்தனம் செய்தாள். அது பலிக்காமல் போகவே, ஒரு நாள் அவள் உன்னைக் குறிப்பிட்டு நிந்தை மொழி கூறினாள். 'அந்தக் காஞ்சி நகர்க் கலைவாணியின் அழகு எனக்கு இல்லையோ?' என்று கேட்டாள். மறுநாள் அவள் என்னை நெருங்கியபோது அவளுடைய கையை நான் பிடித்து என் கை விரல் நகத்தினால் ஒரு கீறல் கீறினேன். அதன் மூலமாகப் பயங்கர விஷம் ஒன்றை அவள் இரத்தத்தில் சேர்ப்பித்தேன். அன்றிரவு அவள் தூங்கி மறு நாள் காலையில் எழுந்து கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டாள். அவ்வளவுதான்;

அவளுடைய மூளை கலங்கிப் பைத்தியம் பிடித்து விட்டது. அவ்வளவு விகார பயங்கரத் தோற்றத்தை அவள் அடைந்திருந்தாள். ஒருவரு மறியாமல் அவள் இந்நகரை விட்டு வெளியேறிக் காட்டிலும் மலையிலும் வெகுகாலம் அலைந்து கொண்டிருந்தாள். இப்போது அவள் காபாலிக மதத்தினரின் பலிபீடத்தில் அமர்ந்து பலி வாங்கிக் கொள்ளும் காளி மாதாவாக இருந்து வருகிறாள்......!"

சிவகாமி பழையபடி பீதி கொண்டாள். இந்த வெறி பிடித்த பிக்ஷு போய்த் தொலைய மாட்டாரா என்று மனதிற்குள் எண்ணமிட்டாள்.

"சிவகாமி! சில நாளைக்கு முன் அந்தக் காளிமாதாவைத் தற்செயலாக நான் சந்திக்க நேர்ந்தது. அவள் என்ன சொன்னாள், தெரியுமா! சுவாமிகளே! ஒருநாள் இல்லாவிட்டால் ஒரு நாள் உம்முடைய காதலி சிவகாமியை நீங்கள் என்னிடம் ஒப்புவித்தேயாக வேண்டும். அவளுடைய உடலைப் புசித்தால்தான் என்னுடைய பசி தீரும்!' என்றாள். பைத்தியக்காரி! அப்படி உன் உடலைப் புசிப்பதாயிருந்தால் அவளிடம் நான் கொடுத்து விடுவேன் என்று எண்ணுகிறாள்! அவளைவிட நூறு மடங்கு எனக்குத்தான் பசி என்பதை அவள் அறியவில்லை! உன்னைப் பார்க்கும்போதெல்லாம் உன்னைக் கடித்துத் தின்று விட வேண்டும் அல்லது அப்படியே விழுங்கிவிட வேண்டும் என்று எனக்குண்டாகும் பேராவலை அவள் என்ன கண்டாள்?......"

திடீரென்று நாகநந்தி பிக்ஷு மலைப் பாம்பாக மாறினார். மலைப் பாம்பு வாயை அகலத் திறந்துகொண்டு, பிளந்த நாக்கை நீட்டிக் கொண்டு, தன்னை விழுங்குவதற்காக நெருங்கிவருவதுபோல் சிவகாமிக்குத் தோன்றியது. "ஐயோ!" என்று அலறிக்கொண்டு அவள் பின்னால் நகர்ந்தாள். கண்களையும் இறுக மூடிக்கொண்டாள்.

நாகநந்தி சிரித்தார். "சிவகாமி! பயந்து விட்டாயா? கண்களைத் திறந்து பார்! புத்த பிக்ஷுதான் பேசுகிறேன்!" என்றார்.

சிவகாமி கண்ணைத் திறந்து பார்த்தாள். சற்று முன் தான்கண்ட காட்சி வெறும் பிரமை என்பதை உணர்ந்து கொண்டாள். ஆயினும் அவளுடைய கண்களில் பீதி நிறைந்திருந்தது.

நாகநந்தி எழுந்து நின்று சொன்னார்:— "என்னை மன்னித்து விடு, சிவகாமி! உன்னை இவ்விதம் பயப்படுத்தி விட்டதற்காக மன்னித்து விடு. நான் சொன்னதை யெல்லாம் யோசித்துப் பார்! ஒருவேளை எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது என்று நீ நினைக்கிறாய் போலும்! நல்லவேளையாக எனக்கு இன்னும் பைத்தியம் பிடிக்கவில்லை. என் அறிவு தெளிவாய்த்தா னிருக்கிறது. ஆனால் இன்னும் கொஞ்ச நாள் வரையில் உன்னிடம் நான் கொண்ட காதல் நிறைவேறாமற் போனால் எனக்குப் பைத்தியம் பிடித்தாலும் பிடித்து விடும். அப்புறம் நான் என்ன செய்வேனோ, தெரியாது.

"சிவகாமி! நான் போய் வருகிறேன். நான் திரும்பி வருவதற்குள் உன் மனதைத் திடப்படுத்திக் கொண்டு எனக்கு ஒரு முடிவு சொல்ல வேண்டும். அது நல்ல முடிவாய்த்தா னிருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. உனக்காக நான் இதுவரை செய்திருக்கும் தியாகங்களை யெல்லாம் காட்டிலும் மகத்தான தியாகம் ஒன்றைச் செய்யப் போகிறேன். அதைப் பற்றி நான் திரும்பி வருவதற்குள் நீயே தெரிந்து கொள்வாய். அதைத் தெரிந்து கொண்ட பிறகு நீ என்மேரில் இரக்கங் கொள்ளாம லிருக்க முடியாது. என் கோரிக்கைக்கு இணங்காம லிருக்கவும் முடியாது."

இவ்விதம் சொல்லி விட்டு நாகநந்தி சிவகாமியை அளவில்லாத ஆர்வம் ததும்பும் கண்களினால் சற்று நேரம் உற்றுப் பார்த்தார். சட்டென்று திரும்பி வாசற் பக்கம் சென்றார்.

சிவகாமியின் உடம்பு அப்புறம் வெகு நேரம் வரையில் வெட வெட என்று நடுங்கிக் கொண்டே யிருந்தது.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: என். வி. துரைசாமி, "வித்யாகுசுமம்" செப்பு போஸ்டு, திருச்சூர் வழி.

# பஞ்சம் இல்லை!



டெல்லாம் 'பஞ்சாம் பஞ்சம்'
ன்று அடித்துக் கொண்டாலும்
ருவெங்கிடீக் கிராமத்தில்
க்டர் ராஜுவுடைய பண்ணை
ல் 'பஞ்சம்' என்ற பேச்சே
டையாது. இந்தப் பங்குனி
ாதக் கடுங் கோடையில் உழ
ம், நடவும் ஆனந்தமாக நடை
பறுகிறது.

★

ழ: முதல் போக மகசூலில்
டைத்த நெல் அம்பாரம்
ம்பாரமாகச் சேர் கட்டிக் கிடப்
தைக் காணலாம்.





காவேரித் தண்ணீர் வாய்க்கால் மூலமாக வந்து குளத்தில் தேங்குகிறது. தேங்கும் தண்ணீரை மின்சார சக்தி மூலம் மேட்டு நிலத்துக்குப் பாய்ச்சுகிறார்கள். இரண்டாவது படத்தில் குழாயிலிருந்து தண்ணீர் கொட்டுவதைக் கவனிக்கவும்.



★

கீழே: முதல் போகம் அறுவடையான நிலத்தை இரண்டாம் போகச் சாகுபடிக்கு உழுகிறார்கள்.









''கரும்பைச் சாறு பிழிந்திடு வீரே!'' என்ற மகா கவியின் வாக்கை டாக்டர் ராஜன் நிறை வேற்றி வைக்கிறார். அவருடைய பண்ணையில் நிறையக் கரும்பு விளைகிறது.

★

கீழே: இயந்திரம் கரும்பைச் சக்கைப் போடு போட்டுச் சாறு பிழிந்து கொண்டிருக்கிறது!



விவசாயத்துக்கு மாடுகளின் உழைப்போடு உரமும் உபயோகமாகிறது டாக்டர் ராஜுவுடைய பண்ணையில் மாட்டின் உரம் சிறிதும் வீண் போகாமல குழிகளில் சேர்க்கப்படுவதைக் காணலாம்.



வைத்தியர் ராஜன் வெங்கிமலையின் அடிவாரத்தில் வெங்காயச் சாகுபடியில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறர்.

# பண்பட்ட பண்ணையார்

சாவி

திருச்சி தேச பக்தர் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜனைப்பற்றிச் சென்ற வாரம் வரையில் நான் அறிந்து கொண்டிருந்த விஷயங்கள் வருமாறு :—

அவர் ஒரு சிறந்த டாக்டர். சீமைக்குப் போய் வைத்தியப் பரீக்ஷையில் தேறிவிட்டு வந்தவர்.

வைத்தியத் தொழிலில் அவருக்கு நாற்பது வருஷ அனுபவம் உண்டு.

ஆபரேஷன் செய்வதில் காலஞ்சென்ற ரங்காச்சாரிக்கு இணையானவர் வேறு யாரேனும் உண்டு என்றால் அவர் டாக்டர் ராஜன் அவர்கள்தான்.

வைத்தியத் தொழிலில் தமக்குள்ள நீண்ட கால அனுபவத்தைக் கொண்டு "வீட்டு வைத்தியர்" என்ற அருமையான வைத்தியப் புஸ்தகம் ஒன்றை எழுதியிருக்கிறார்.

சென்னையில் காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்ட சமயம் டாக்டர் ராஜன் வைத்திய மந்திரியாக இருந்தார்.

இப்போது அவருக்கு வயது 66 ஆகிறது.

மேலே சொன்னதெல்லாம் நான் ஏற்கனவே தெரிந்து கொண்டிருந்த விஷயங்கள். சென்ற வாரத்தில் நான் புதிதாகத் தெரிந்து கொண்ட விஷயம், டாக்டர் ராஜன் ஒரு பெரிய பண்பட்ட பண்ணையார் என்பது.

* * *

டாக்டர் ராஜன் தம்முடைய மந்திரிப் பதவியை ராஜினாமாச் செய்த பிறகு திருச்சி ஜில்லாவில் திருவெங்கிமலை என்னும் கிராமத்துக்குப் போய் விவசாயத் தொழில் புரிந்து வருகிறார். பல ஏகரா நிலத்தைப் பண்படுத்திச் செப்பனிட்டு நெல்லும் கரும்பும் வெங்காயமும் வாழையும் பயிர் செய்யும் பெரிய விவசாயி அவர்.

என்ன ? விவசாயமா ? போயும் போயும் விவசாயத் தொழில்தானா அகப்பட்டது ? எங்கேயாவது ஒரு ஆஸ்பத்திரி வைத்து ஆயிரக்கணக்கில் சம்பாதிப்பதை விட்டு விட்டு இது என்ன தொழில் என்று நானே கேட்கத் தோன்றுகிறது ?

வைத்திய ராஜன் விவசாயி ராஜனாக மாறியதற்குக் காரணமாயிருந்தவர் அவருடைய அருமை நண்பரான ராஜாஜிதான். மந்திரி வேலையை விட்டதும் டாக்டர் ராஜன் ஊருக்குப் போவதற்கு ராஜாஜியிடம் விடை பெற்றுக் கொள்ள வந்தார்.

"ஊரில் என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று ராஜாஜி கேட்டார்.

"என்ன செய்ய வேண்டும்?" என்று ராஜன் திருப்பிக் கேட்டார்.

"எது வேணுமானாலும் செய்யுங்கள்; ஆனால் மறுபடியும் வைத்தியத் தொழிலுக்குப் போவது அவ்வளவு உசிதமாகத் தோன்றவில்லை!" என்றார்.

டாக்டர் ராஜனுக்குத் தூக்கி வாரிப் போட்டதா, இல்லையா என்பது நமக்குத் தெரியாது. அவர் வைத்தியத் தொழிலுக்குப் போகாமலிருப்பது சாதாரணமான விஷயமல்ல. மாதா மாதம் ஆயிரக்கணக்கில் பணம் சம்பாதிப்பதை விடும் விஷயமாகும். டாக்டர் ராஜன் சிறிது நிதானித்துவிட்டு, "சரி; வைத்தியத்துக்குப் போகவில்லை; விவசாயத்துக்குப் போகிறேன்" என்று சொன்னார்.

ராஜாஜிக்கு இதுவும் பிடிக்கவில்லை. "விவசாயத்துக்கு ஏன் போகிறீர்கள்? பண நஷ்டம் ஆகுமே!" என்று கவலையுடன் கேட்டார்.

"உழுகிறவன் கணக்குப் பார்த்தால் உழக்குத் தேறாது!" என்பது பழமொழி அல்லவா? அதை நினைத்தே ராஜாஜி அவ்வாறு கேட்டிருக்க வேண்டும்.

ஆனால் டாக்டர் ராஜன் பிடிவாதக்காரர் என்பது பிரசித்தமான விஷயம். "உழக்குத் தேறுமா தேறாதா என்று ஒரு கை பார்த்தே விடுகிறேன்!" என்று சொல்லிவிட்டுப் போனார். விவசாயத்தை விடாப் பிடியாக விடாமல் தொடர்ந்து நடத்தினார். உழுகிறவன் கணக்குப் பார்த்தால் உழக்கு என்ன பிரமாதம், ஒன்றரை லக்ஷம் கூடத் தேறும் என்று நிரூபித்தார்!

சென்ற சில வருஷ காலத்துக்குள் டாக்டர் ராஜன் விவசாயத்தின் மூலமாக

ஒன்றரை லட்ச ரூபாய் சம்பாதித்து விட்டாராம். இதை நான் சுலபத்தில் நம்பியிருக்க மாட்டேன். டாக்டர் ராஜன் அவர்களே நேரில் சொன்னதனால்தான் நம்பினேன்.

ரொம்ப சரி; டாக்டர் ராஜனுக்கு இவ்வளவு தூரம் விவசாயப் பற்று ஏற்பட்டதற்கு என்ன காரணம்? வைத்தியத்தை விட்டு விட எண்ணியதும் விவசாயத்தில் பிரவேசிப்பானேன்?

அந்தக் கதையை டாக்டர் ராஜன் தம்முடைய விவசாயப் பண்ணையில் வைத்தே எனக்குச் சொன்னார்.

இருநூறு ஏகரா நிலங்கள் எப்படித் தம் கைக்கு வந்தது என்பதில் ஆரம்பித்து இன்று வரை அந்த நிலங்களுக்காக அவர் பட்ட பாட்டையும் அந்த நிலங்களை அவர் படுத்திய பாட்டையும் பற்றிக் கதை கதையாகச் சொன்னார்.

அந்தக் கதையை அவர் சொல்லிக் கொண்டு வந்த பொழுது சில சமயம் என்னை யறியாமல் என் கண்களில் கண்ணீர் சுரந்தது. சில சமயம் நாக்கில் ஜலம் ஊறியது! வெங்காயப் பயிரைப் பற்றிச் சொன்னபோது கண்களில் கண்ணீரும், கரும்புச் சாகுபடியைப் பற்றிச் சொன்ன போது நாக்கில் ஜலமும் வந்ததில் வியப்பில்லை அல்லவா?

* * *

டாக்டர் ராஜன் திருச்சியில் வைத்தியத் தொழில் புரிந்து கொண்டிருந்த சமயம் வழக்கமாக அவரிடம் வைத்தியம் செய்து கொள்வதற்காக ஒரு நண்பர் வந்து கொண்டிருந்தாராம். மேற்படி நண்பருக்கு ஒருசமயம் பணமுடை ஏற்படவே, டாக்டரிடம் 25,000 ரூபாய் கடனாகக் கேட்டார். டாக்டர் ராஜனும் திருவெள்ளறை மலையிலுள்ள மேற்படி நண்பருடைய 200 ஏகரா நிலங்களை அடமானமாக எழுதி வாங்கிக் கொண்டு 25,000 ரூபாய் கடனாகக் கொடுத்தார். பிறகு கொடுத்த கடன் திரும்புவதற்கு மார்க்கமில்லாமல் போகவே அந்த 200 ஏகரா நிலங்களையும் தாமாகவே ஏலத்தில் எடுத்துக் கொள்ளும்படி ஆயிற்றாம்.

ஒரு விவசாய விகடம் தெரியுமா? ஐந்நூறு ஏகரா தரிசு நிலத்துக்குச் சொந்தக்காரர் ஒருவர் கிராமத்துத் திண்ணை ஒன்றில் உட்கார்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தார். அப்போது அவருடைய நிலத்தை அவர் வாங்கிய கடனுக்காக ஏலம் போட்டுக் கொண்டிருந்தார்கள். இந்தச் சங்கதியை ஒருவர் அவரிடம் ஓடி வந்து சொல்லி, "என்ன ஐயா! உம்முடைய நிலத்தை ஏலம் போடுகிறார்கள். நீர் பாட்டுக்குச் சும்மா சீட்டாடிக் கொண்டிருக்கிறீரே?" என்றாராம்.

அதற்கு அவர், "பேஷாய்ப் போடட்டும். ஏலம் (ஏலக்காய்) வேண்டுமானாலும் போடட்டும். சோளமே வேண்டுமானாலும் போடட்டும். என்னுடைய நிலத்தில் அதெல்லாம் ஒன்றும் விளையாது!" என்று பதில் கூறினாராம்.

டாக்டர் ராஜன் ஏலம் எடுத்த நிலங்களும் அந்தச் சமயம் மேற்கண்ட நிலைமையில் தான் இருந்தனவாம்!

அதாவது அந்த இருநூறு ஏகரா நிலத்தில் முக்கால் வாசிக்குமேல் ஒரே காம்பா விருந்ததாம். இப்போதோ அந்த நிலமெல்லாம் ஒரே கரும்பா யிருக்கிறது!

நிலங்களைச் சீர்திருத்தும் விஷயத்தில் டாக்டர் ராஜன் 'ராக்ஷஸ வேலை' புரிந்திருக்கிறார் என்றே சொல்ல வேண்டும். அப்படிச் சீர்திருத்திய நிலங்களுக்குப் பகீரதப் பிரயத்தனம் செய்து காவேரியிலிருந்து ஜலம் கொண்டு வந்திருக்கிறார். கொண்டு வந்த ஜலத்தை நிலத்தில் பாயச் செய்வதற்கு மின்சாரப் பிரயத்தனம் செய்திருக்கிறார்; அதாவது மின்சார சக்தியைக் கொண்டே ஜலம் பாய்ச்சுகிறார்.

நாற்பது மைல் தூரத்துக் கப்பாலுள்ள ஒரு முகப்பிலிருந்து காவேரி ஜலம் ஒரு வாய்க்கால் வழியாக வருகிறது.

அந்த ஜலத்தை ஒருஇடத்தில் குளமாகத் தேக்கி மேடான நிலங்களுக்கு உயரமான குழாய்களும், அதற்கும் கொஞ்சம் தாழ்ந்த இடங்களுக்கு வேறு குழாய்களும் அமைத்து ஜலம் பாய்ச்சப்படுகிறது. மொத்தம் மூன்று 'மெயின்' குழாய்கள் 39 குதிரை வேகத்தில் வேலை செய்து கீழேயிருந்து ஜலத்தை உறிஞ்சி மேலே கொண்டு வந்து விடுகின்றன.

இந்த மூன்று குழாய்களும் இராப்பகல் ஓய்வின்றி வேலை செய்து 140 ஏகர் நிலங்களையும் எப்போதும் ஈரமாக வைத்துக் கொண்டிருக்கின்றனவாம்.

மின்சார வசதிக் குறைவை உத்தேசித்தே இன்னும் பாக்கியுள்ள நிலங்களைப் பண்படுத்தாமல் வைத்துக் கொண்டிருக்கிறாராம். வருகிற வருஷங்களில் டாக்டர்

ராஜன் அவற்றையும் பண்படுத்திப் பயிர் செய்து விடுவார் என்றே தோன்றுகிறது.

*   *   *

“நிலங்களைச் சுற்றிப் பார்த்து வரலாமா?” என்று நான் கேட்டதும் டாக்டர் அவர்கள் சந்தோஷமாக ஒப்புக்கொண்டார். அவர் பண்படுத்திப் பயிர் செய்த நிலங்களைப் பார்ப்பதில் அவருக்கே அளவில்லாத சந்தோஷம்.

ஊருக்குக் கிழக்கே வெகு சமீபத்தில் நிலங்கள் இருந்தன. முதலில் வாழைத் தோட்டத்துக்குள் பிரவேசித்தோம். போகும்போது டாக்டர் அந்த ஊர் அமைப்பின் விசேஷத்தைப் பற்றிச் சொன்னார். அது என்னவென்றால், அந்த ஊரை மலைப் பகுதி, நிலப்பகுதி, காவேரிப் பகுதி என்று மூன்று சம பிரிவுகளாகப் பிரிக்க முடியுமாம். மலையின் விஸ்தீரணம், நிலங்களின் விஸ்தீரணம், ஊருக்கு அடுத்த அகண்ட காவேரியின் விஸ்தீரணம் மூன்றும் தனித் தனியாக 300 ஏகராவாம்.

வாழைத் தோட்டத்தைச் சுற்றிப் பார்த்ததும் வயல் வெளிக்குச் சென்றோம். அங்கே உழவும் நடவும் நடந்து கொண்டிருந்தன. நெற்பயிர் நடவுதான். சென்னைப் பட்டணத்திலே பஞ்சம் வந்தால் இங்கே வந்து விடுவது என்று மனதிற்குள் தீர்மானித்துக் கொண்டேன்.

பிறகு வாய்க்கால் வரப்பின்மீதே கரும்புத் தோட்டத்தைப் பார்க்கச் சென்றோம்.

வாய்க்கால் ஜலத்தில் ஒரு பாம்பு ஓடி வருவதைக் கண்டதும் என்னுடன் வந்த புகைப்படக்காரர் பயந்து போய்விட்டார். “பயப்படாதீர்கள்! அது ஒன்றும் செய்யாது. பாம்புகள் விவசாயிகளின் தோழர்கள்; எலிகள்தான் விவசாயிகளின் விரோதிகள்” என்றார் ராஜன்.

“அது எப்படி?” என்று கேட்டேன்.

“பாம்புகள் இல்லை என்றால் எலிகள் பயிர்களின் வேரைக் கடித்து நாசம் செய்து விடும்” என்றார்.

பக்கத்திலிருந்த பயிர்களைப் பார்த்து போட்டோக்காரர், “இது என்ன பயிர்?” என்று கேட்டார்.

“இதெல்லாம் குருவைப் பயிர்” என்றார் ராஜன். பிறகு பலதரப்பட்ட தானியங்களைப் பற்றியும் அரிசி வகைகளைப் பற்றியும் டாக்டர் ராஜன் விளக்கிக் கூறினார்.

போட்டோக்காரர் இடையிடையே சில குறுக்குக் கேள்விகள் கேட்டு டாக்டரைச் சிரிக்க அடித்தார்.

“என் ஸார்! ஜவ்வரிசி எப்படிக் காய்க்கும்?” என்று அவர் கேட்டபோது டாக்டரால் சிரிப்பை அடக்கவே முடியவில்லை.

“ஜவ்வரிசி என்பது காய்க்கும் தானியமல்ல. மரவள்ளிக் கிழங்கை வேகவைத்து அதிலிருந்து உண்டாகும் மாவிலிருந்து ஜவ்வரிசி தயார் செய்கிறார்கள்” என்று தெரிவித்தார்.

பிறகு கரும்புத் தோட்டத்துக்குள் போனோம். நாங்கள் போயிருந்த அன்று தான் கரும்பு அறுவடை வேலை ஆரம்பமாயிற்று. கரும்பு வெட்டி, ஆலையில் அடித்து, சாறு பிழிந்து, கொப்பரையில் கொட்டிக் காய்ச்சிப் பதம் பண்ணுகிறவரையில் கூடவே இருந்து பார்த்தோம்.

புகைப்படக்காரருக்கு மறுபடியும் ஒரு சந்தேகம் வந்தது. “என் ஸார்! பனைவெல்லம் எப்படித் தயார் பண்ணுகிறீர்கள்?” என்று கேட்டார்.

டாக்டர் ராஜன் மறுபடியும் சிரித்துவிட்டு “நீர் என்ன சுத்தப் பட்டணத்துப் பேர்வழியாயிருக்கிறீரே? பனை வெல்லம்

"என்பது பனைமரத்திலிருந்து உற்பத்தி செய்வது; அதற்கும் கரும்புச் சாற்றுக்கும் ஒருவித சம்பந்தமும் கிடையாது" என்றார்.

பின்னர் களத்துமேடு, நெல் களஞ்சியம். மாட்டுக் கொட்டில், மாந்தோட்டம், வெங்காயத் தோட்டம், தரிசு நிலம், உப்பு பூத்த நிலம், சதுப்பு நிலம் முதலிய எல்லா நிலங்களையும் பார்த்த பிறகு வீடு வந்து சேருவதற்குள் மணி ஒன்றடித்து விட்டது.

வீட்டுக்கு வந்ததும் சாப்பிட உட்கார்ந்தோம். சாப்பிடும்போது டாக்டர் ராஜனைப் பார்த்து, "ஆமாம்; உங்களுடைய நிலங்களில் நீங்கள் பயிர் செய்தது போகச் சாப்பாட்டுக் கென்று கடையிலிருந்து என்னென்ன சாமான்கள் வாங்குகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"அப்படிக் கேளுங்கள்; கிராமத்திலிருப்பதில் அதுதான் பெரிய சௌகரியம். எங்களுக்கு வேண்டிய சாமான்களை நாங்களே பயிர் செய்துகொள்கிறோம். நிலங்களுக்கு வேண்டிய ஆகாரங்களும் இங்கேயே கிடைக்கின்றன. மாடுகளுக்கு வேண்டிய தீனிகளும் அப்படித்தான். எதற்கும் பிறத்தியார் கையை எதிர்பார்க்க வேண்டிய அவசியமே கிடையாது. அரிசி, பருப்பு, பால், தயிர் எல்லாம் கிடைத்து விடுகின்றன. உப்பு, சர்க்கரை, கடுகு, வெந்தயம், மிளகு, காப்பிக்கொட்டை இந்த ஆறு சாமான்கள் தான் கடையில் வாங்குகிறோம். மாட்டுக்கு வேண்டிய புல், வைக்கோல், கடலைப் பிண்ணாக்கு இவை எல்லாம் நிலத்திலிருந்து கிடைக்கின்றன. நிலங்களுக்கு வேண்டிய உரம் மாடுகள் தருகின்றன. எல்லாம் ஒன்றுக் கொன்று பரஸ்பர உதவி. விவசாயத்திலேயே அதுதான் பெரிய அதிசயம்" என்றார் டாக்டர் ராஜன்.

"இவ்வளவு பெரிய முதல்தரமான விவசாயப் பண்ணை வைத்து நடத்துகிறீர்களே? இதை யாரும் பார்க்க வருவது கிடையாதா?" என்று கேட்டேன்.

"வராமல் என்ன? சர்க்காரிலேயே அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பன்னிரண்டு ஜில்லாக்களிலிருந்து ஜில்லாவுக்குப் பத்து விவசாயிகள் வீதம் தேர்ந்தெடுத்து இங்கே கும்பல் கும்பலாக அனுப்புகிறார்கள். போன வாரம் கூட ஒரு கும்பல் வந்துவிட்டுப் போயிற்று. விவசாய இலாகாவைச் சேர்ந்த 'டிமான்ஸ்டிரேடர்' ஒருவர் அவர்களுடன் வந்து என்னுடைய பண்ணையைச் சுற்றிக் காண்பித்து விவசாய நுட்பங்களையெல்லாம் அவர்களுக்கு விளக்கிச் சொல்லுகிறார்" என்றார்.

* * *

டாக்டர் ராஜன் அவர்களின் விவசாயப் பண்ணையைப் பார்த்த பிறகு எனக்குள் இருந்த ஒரு பெரிய திகில் நீங்கி விட்டது. சில காலமாக "பஞ்சம் வரப் போகிறது. அதிகமாகப் பயிர் செய்யுங்கள். கடலைக் கொட்டை சாப்பிடுங்கள். வள்ளிக் கிழங்கைப் புசியுங்கள்" என்றெல்லாம் இந்திய சர்க்கார் பயமுறுத்திக் கொண்டும் பிரசாரம் செய்து கொண்டும் இருக்கிறார்களல்லவா? ஸர். ஏ. ராமசாமி முதலியாரும் இந்திய சர்க்கார் தூதுகோஷ்டியும் அமெரிக்காவுக்குப் போய் "பிக்ஷாந்தேஹி!" என்று கையேந்தி நின்றார்களல்லவா? நம்முடைய நாட்டு நிலைமை கெடுகிலும் இப்படியே இருந்து விடுமோ, — நெல்லுக்கும் கோதுமைக்கும் இனிமேல் அயல் நாடுகளையே நம்பி வாழ வேண்டியதுதானோ, — என்ற பயம் எனக்கு நீங்கிற்று.

டாக்டர் ராஜன் இந்தத் திருவெக்கிமலைக் கிராமத்தில் சாதித்திருப்பதை இந்த நாடு முழுவதிலும் சாதிக்கலாம். கரம்பு நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வரலாம். விளைச்சலை ஒன்றுக்கு இரு மடங்காகவும் மூன்று மடங்காகவும் கூடச் செய்யலாம். நாட்டில் பஞ்சம் என்பது தலைகாட்டாமல் அடிக்கலாம். இதையெல்லாம் சாதிப்பதற்கு அறிவும், திறமையும், விடாமுயற்சியும் மட்டுந்தான் வேண்டும். அறிவுக்கும் திறமைக்கும் விடாமுயற்சிக்கும் என்ன பிரமாதம்? "எங்கே வாங்கினீர்கள்?" என்று டாக்டர் ராஜனையே கேட்டுத் தெரிந்து கொண்டால் போகிறது!

* * *

சென்னைக்குத் திரும்பி வந்ததும் ஆசிரியர் "டாக்டர் ராஜனுடைய விவசாயமெல்லாம் எப்படி?" என்று கேட்டார்.

"அபாரம்!" என்றேன்.

"எப்படி?" என்று கேட்டார்.

"தம்முடைய நிலத்தில் விளைந்தது என்று சொல்லி டாக்டர் ராஜன் தங்களுக்கு இரண்டு மூட்டை வெங்காயம் அனுப்பியிருக்கிறார். அது ரொம்ப ரொம்ப பாரமாயிருந்தது. அதனால்தான் விவசாயம் அபாரம் என்று கூறினேன்!" என்றேன்.



# ஆடல் பாடல்



கர்நாடகம்

"இந்த இளம் வித்வான் சீக்கிரத்தில் முன்னுக்கு வர வேண்டியவர்" என்ற பல்லவியைப் பலர் விஷயத்தில் அடிக்கடி கேட்டிருக்கிறோம். "நாளைக்குக் கடன்" என்று எழுதி ஒட்டுவதைப் போல், சில இளம் பாடகர்கள் எப்போதும் "சீக்கிரத்தில் முன்னுக்கு வர வேண்டியவர்"களாகவே நின்று விடுகிறார்கள்!

ஆனால், வேறு சில இளம் வித்வான்கள் நன்றாக முன்னுக்கு வந்த பிற்பாடும் கூட, அவர்கள் விஷயத்தில் "சீக்கிரத்தில் முன்னுக்கு வர வேண்டியவர்" என்ற பல்லவி அனாவசியமாகப் பாடப்பட்டு வருகிறது.

சங்கீத வித்வான் ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதியைப் பற்றிய வரையில் மேற்படி பல்லவி இனிமேல் அர்த்தமற்றதே யாகும்.

ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி சங்கீத உலகில் முன்னுக்கு வந்து கச்சேரி மேடையில் ரொம்ப முன்னால் அமர்ந்திருக்கிறார். இதைத் தெரிந்து கொள்ளாவிட்டால், அது சங்கீத ரஸிகர்களுடைய தவறே யல்லாமல் வித்வானின் தவறு அல்ல.

* * *

சென்ற மார்கழி 24உ ஞாயிற்றுக் கிழமை செயிண்ட் மேரீஸ் ஹாலில் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி கச்சேரி செய்தார். அகில இந்திய ரேடியோவைச் சேர்ந்த ஸ்ரீ கோவிந்தசாமி வயலினும் ஸ்ரீ கண்ணன் மிருதங்கமும் வாசித்தார்கள்.

கச்சேரி எல்லா விதத்திலும் முதல் தரமாயமைந்தது.

எந்தெந்த விதத்தில் என்றால் :—

1. வித்வானின் சாரீரம் இனிமையாகவும் கம்பீரமாகவும் ஒலித்து மனோபாவம் போனபடி யெல்லாம் பேசி உதவி செய்தது.

2. காம்போதி, பைரவி, சங்கராபரணம் ஆகிய கன ராகங்களை விஸ்தாரமாகவும் உசிதமான கார்வைகள், ரவைகளுடனும் வித்வான் ஆலாபனம் செய்தார்.

வராளி, ஆபோகி ஆகிய ராகங்களைக் கச்சிதமாகவும் அழகாகவும் ஆலாபித்தார்

ஆலாபனத்தில் பொதுவாக ராகபாவமும் பாணியின் சிறப்பும் நன்கு விளங்கின.

3. "ஸ்ரீ சுப்ரமணியாய" என்னும் தீக்ஷிதர் கிருதியையும், "யாருக்குப் பொன்னம்பலம்" "சபாபதிக்கு வேறு தெய்வம்" முதலிய பல செந்தமிழ்க் கீர்த்தனங்களையும் சரியான காலப் பிரமாணத்தில் பொருத்தமான சங்கதிகளுடன் நன்றாகப் பாடினார். உசிதமான நிரவல்கள், ஸ்வரப்பிரஸ்தாரங்களும் செய்தார்.

4. தானம், பல்லவி ஆகியவற்றைச் சம்பிரதாயமாகவும் சாஸ்திரீயமாகவும் பாடினார்.

5. பல்லவிக்குப் பிற்பாடு, "எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி" என்ற பாரதியார் பாடலை உருக்கமாகவும் கம்பீரமாகவும் பாடகர் பாடி முடித்ததும் சபையில் மகத்தான கரகோஷம் எழுந்தது. அந்தக் கரகோஷமானது சபையில் நிறைந்திருந்த ரஸிகர்களின் கூட்டத்தின் அளவையும் அவர்களுடைய ரஸிகத் தன்மையின் சிறப்பையும் குறிப்பிட்டுக் காட்டியது.

6. கேதார கௌளத்தில் தொடங்கி ராக மாலிகையாகப் பாடிய "அன்னையும் அப்பனும் நீயே" என்னும் விருத்தத்தில், இந்த இளம் வித்வான் வெறும் ஏட்டுச் சுரைக்காய் வித்வான் அல்ல,—சங்கீத வித்வத்துடன் கல்வியறிவும் நல்ல பண்பாடும் உள்ளவர் என்பது புலனாயிற்று.

7. பக்க வாத்திய வித்வான்கள் பாடகருடன் நன்கு ஒத்துழைத்துத் தங்கள் திறமையையும் நன்கு காட்டிக் கச்சேரியைச் சிறப்பித்தார்கள்.

மிருதங்க வித்வான் கண்ணன் ரூபக தாளத்திலும் ஆதி தாளத்திலும் வாசித்த

தனி ஆவர்த்தங்கள் நல்ல விறுவிறுப்புடனும் நாதக் கட்டுடனும் ஜம் மென்று அமைந்தன.

* * *

ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதியின் கச்சேரியை மூன்று வருஷத்துக்குப் பிறகு இப்போது தான் நேரில் கேட்டேன். இந்த மூன்று வருஷத்துக்குள்ளே அவருடைய சங்கீத பாணியும், கச்சேரி பந்தாவும் எவ்வளவு மேன்மையடைந்திருக்கின்றன என்பதைக் காண மிக்க வியப்புடன் மகிழ்ச்சியும் ஏற்பட்டது.



ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி

எழுத்தாளர் உலகத்தில் புகழ் பெற்ற நமது அன்புக்குரிய எஸ். வி. வி. அவர்களின் புதல்வர் சங்கீத உலகத்தில் இவ்வளவு துரித காலத்தில் பிரபல மடைந்திருப்பது பற்றி விசேஷமான பெருமையும் அடைந்தேன்.

* * *

கச்சேரி முடிந்து வெளியில் வந்த போது, தமிழிசைச் சங்கத்தின் உதவிக் காரியதரிசி ஸ்ரீ கமலசாமியைச் சந்தித்தேன்.

"இந்த மாதிரி தமிழிசைக் கச்சேரி மாதந்தோறும் நடத்துகிறீர்களா?" என்று கேட்டேன்.

"மாதம் ஒன்று இல்லை, இரண்டுகூட நடத்துகிறோம். பிப்ரவரியில் தஞ்சாவூர் லக்ஷ்மிநாராயண பாகவதர் கச்சேரியும், இம் மாதம் 10உ ஆலத்தூர் சகோதரர் கச்சேரியும் நடந்தன" என்றார் கமலசாமி.

"ஒவ்வொரு கச்சேரிக்கும் இவ்வளவு ரஸிகர்கள் கூட்டம் வருகிறதா?" என்று கேட்டேன்.

"இன்னும் அதிகமாகக்கூட வருவார்கள். ஹாலில் இடமில்லை" என்றார்.

"ஆமாம்; இப்படித் தமிழிசைக் கச்சேரி கேட்க வருகிறவர்களுக்கெல்லாம் நீங்கள் ஏதேனும் பணம் கொடுப்பது உண்டா?" என்று கேட்டேன்.

"இது என்ன கேள்வி? அவர்கள்தான் பணம் கொடுத்துக் கேட்க வருகிறார்கள். மொத்தம் இப்போது 950 அங்கத்தினர் இருக்கிறார்கள். மாதந்தோறும் அவ்வளவு பேரும் சந்தா கொடுக்கிறார்கள்!" என்று ஸ்ரீ கமலசாமி கூறியதும், "அடே அப்பா! ஆச்சரியந்தான்!" என்றேன்.

"என்ன ஆச்சரியம்?" என்று உதவிக் காரியதரிசி கேட்டார்.

"தமிழிசை இயக்கமானது ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்காக ராஜா ஸர் அவர்களால் ராஜா ஸர் அவர்களின் பணத்தைக் கொண்டு நடத்தப்படும் இயக்கம் என்று சிலர் சொன்னார்களே! இப்போது பார்த்தால் வேறுவிதமாகக் காண்கிறதே!" என்றேன்.

"அப்படிச் சொன்னது தப்பு என்று நன்றாய் ஏற்படுகிறதல்லவா?"

"ஆமாம்; தமிழிசை ஆர்வம் சென்னை ரஸிகர்களிடையே நன்கு வேர் ஊன்றி விட்டதாகத்தான் தோன்றுகிறது. நிஜமாக 950 அங்கத்தினர்களா இருக்கிறார்கள்? அவ்வளவு பேரும் தவறாமல் சந்தா கொடுப்பதன்றியில், கச்சேரி கேட்கவும் வருகிறார்களா?" என்று கேட்டேன்.

"இது என்ன பிரமாதம்? ஹால் மட்டும் இடம் கொடுத்தால் 2000 அங்கத்தினர் கூடச் சேர்த்து விடலாம்" என்றார் ஸ்ரீ கமலசாமி.

"சபாஷ்!" என்றேன் நான். அந்த 'சபாஷ்' தமிழிசை இயக்கத்துக்குத்தான்; அந்த இயக்கத்தில் ஊக்கமுடைய உதவி காரியதரிசிக்குந்தான்.

சாதாரணமாக, ஒரு சங்கீத சபையை நடத்துவது எளிய காரியமல்ல. அதற்கு மிக்க திறமைவேண்டும். அதிலும் தமிழிசைச் சங்கத்தை நடத்துவதற்குத் திறமையோடு பொறுமையும் ரொம்ப வேண்டும்.

மேற்படி குணங்களை நன்கு பெற்ற ஸ்ரீ கமலசாமியை உதவிக் காரியதரிசியாகப் பெற்றது தமிழிசைச் சங்கத்தின் அதிர்ஷ்டமென்றே சொல்லலாம். அத்தகைய திருப்பணியைச் செய்வதற்குக் கொடுத்து வைத்ததில் ஸ்ரீ கமலசாமியும் அதிர்ஷ்டசாலிதான்.

AC-5A-T14

"நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளில் பணத்தை வட்டிக்குப் போட்டுவைப்பதை முக்கியமாய் இரண்டு காரணங்களுக்காக நான் சிபாரிசு செய்கிறேன். முதலாவதாக, பொதுஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக நிறைவேற்றப்படவேண்டிய எதிர்கால அபிவிருத்தித் திட்டங்களில் தேசிய சேமிப்புகள் ஒரு முக்கிய பங்கெடுத்துக்கொள்ள வேண்டும். இதை நோக்கமாகக் கொண்டு, பணம் சேர்த்து வைப்பதன் உபயோகத்தைப்பற்றிப் பொதுஜனங்களுக்கு இப்போதிருந்தே போதனை செய்து வரவேண்டும். அப்படிச் செய்தால்தான், சேர்த்துவைத்த அப் பணத்தை இன்னும் சுபிட்சமான ஓர் இந்தியாவைத் தோற்றுவிப்பதற்காகச் சரியான காலத்தில் உபயோகிக்க முடியும். இரண்டாவதாக, நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகள் மிகப் பத்திரமானவை என்பதோடு கூட, தற்போதைய நிலைமைகளில் அவைகளிலிருந்து நல்ல வருமானமும் கிடைக்கிறது. அசல், வட்டி ஆகிய இவ்விரண்டுக்கும் கவர்ன்மென்டார் உத்திரவாதம் கொடுக்கிறார்கள். மேலும் அதிலிருந்து $4\frac{1}{6}$ சதவீதத் தனிவட்டியாக லாபம் கிடைக்கிறது. இந்த வட்டிக்கு இன்கம்டாக்ஸ் கிடையாது."

Nalini Ranjan Sarkar



மிஸ்டர் நளினிரஞ்சன் ஸர்க்கார், மாஜி அங்கத்தினர், வைஸ்ராய் எக்ஸிக்யூடிவ் கௌன்ஸில்; மாஜி திரவிய மந்திரி, வங்காளம்; ப்ரெஸிடென்ட், ஹிந்துஸ்தான் கோஆபரேடிவ் இன்ஷுரன்ஸ் கொம்பெனி லிமிடெட்.

## பார்த்தும் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயங்கள்

1. நீர் நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளை 5, 10, 50, 100, 500, 1,000 அல்லது 5,000 ரூபாய்களுக்கு வாங்கலாம்.
2. எந்த ஒருவரும் 5,000 ரூபாய்க்குமேல் வாங்க முடியாது. இவை மிகச் சிறந்தவைகளானபடியால், எல்லாருக்கும் கிடைக்கும்பொருட்டு ஒருவருக்கு அவைகளை இன்ன மதிப்பு வரையில்தான் கொடுக்கலாமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இரண்டுபேர் கூட்டாக 10,000 ரூபாய்க்கு வாங்கலாம்.
3. இவைகளின் மதிப்பு 12 வருஷங்களில் 50 சதவீதம் உயருகிறது. வட்டிக்குப் போட்டுவைக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாயும் ஒன்றரை ரூபாய் ஆகிவிடுகிறது.
4. உரிய காலத்தில் இவைகளிலிருந்து கிடைக்கும் லாபம் $4\frac{1}{6}$ சதவீதம் தனிவட்டியாகும்.
5. சம்பாதிக்கப்பட்ட வட்டிக்கு இன்கம் டாக்ஸ் செலுத்த வேண்டியதில்லை.
6. இவைகளை 2 வருஷங்களுக்குப் பிறகு (5 ரூபாய் ஸெர்டிபிகேட்டுகள் விஷயத்தில் 18 மாதங்களுக்குப் பிறகு) ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம்; ஆனால், நீர் இவைகளை நெடு காலம் முழுவதும் வட்டிக்கு விட்டுவைத்திருந்தால் உமக்கு நல்ல லாபம் கிடைக்கும்.
7. சிறு தொகைகளைச் சேர்த்துவைப்பவர்கள் 1 ரூபாய், 8 அணா அல்லது 4 அணாவுக்கு ஸேவிங்ஸ் ஸ்டாம்புகள் வாங்கலாம். சேர்க்கப்பட்ட ஸ்டாம்புகளின் மதிப்பு 5 ரூபாயானதும், அவைகளைக் கொடுத்துவிட்டு அவைகளுக்குப் பதிலாக ஒரு ஸெர்டிபிகேட் பெற்றுக்கொள்ளலாம்.
8. இந்த ஸெர்டிபிகேட்டுகள், ஸ்டாம்புகள் ஆகிய இரண்டையும் தபாலாபீஸுகளிலாவது கவர்ன்மென்டாரால் நியமிக்கப்பட்ட அதிகாரம்பெற்ற ஏஜென்டுகளிடமாவது ஸேவிங்ஸ் பீரோக்களிலாவது பெற்றுக்கொள்ளலாம்.

உமது பணத்திலிருந்து 50 சதவீதம் லாபம் கிடைக்கும்படிச் செய்துகொள்ளவும்.

# நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகள் வாங்கவும்.



# காலக்ஷேபம்

## பெருமை!

வேலையாள்:—நீங்க வெளியே போயிருந்த போது 'சூப்பரெண்ட்' வீட்டிலிருந்து டெலி போனிலே பேசினாங்க!

எஜமான்:—அடடே! அவர் என்னையும் ஒரு பொருட்டாக மதித்துப் 'போன்' பண்ணினாரா? என்னடா சொன்னார்?

வேலையாள்:—நம்பர் பிசகிக் கூப்பிட்டு விட்டேன்னு சொன்னாருங்க!

—மூ. அப்துல் வகாப்.

★

## சந்தேகம்!

தந்தை:—ராஜா! இனிமேல் நீ பூனையை அடித்தால் நான் உன்னை அடிப்பேன். அதன் காதைப் பிடித்துத் திருகினால் உன் காதைப் பிடித்துத் திருகுவேன். தெரிகிறதா—?

பிள்ளை (சற்று யோசித்துவிட்டு):—அப்பா! நான் அதன் வாலைப் பிடித்துத் திருகினால்?

—எஸ். எஸ். மணியன்.

★

## நல்ல வியாபாரம்

நண்பர் (மற்றவரிடம்):—புறு வியாபாரம் எப்படி நடக்கிறது?

மற்றவர்:—வெகு நன்றாக நடக்கிறது.

நண்பர்:—எப்படி?

மற்றவர்:—காலையில் புறுவை விற்கிறேன். மாலையில் அவை என்னிடமே திரும்பி வந்து விடுகின்றன. மறு நாள் மீண்டும் அவைகளைக் கொண்டு போய் விற்று விட்டு வருகிறேன்!

—எம். எஸ். துரைசாமி.

★

## மேலும் குற்றம்

சப் இன்ஸ்பெக்டர் (குற்றவாளியைப் பார்த்து):—நேற்றிரவு சைகிளில் 'லைட்' இல்லாமல் சென்றது தப்புதானே?

குற்றவாளி:—ஆமாங்க; தப்புதானுங்க!

சப் இன்ஸ்பெக்டர்:—பின் ஏன் 'நிறுத்து!' என்றால் நிறுத்த வில்லை!

குற்றவாளி:—சைகிளில் 'பிரேக்' இல்லீங்க; அதனால்தானுங்க!... —வீ. வெங்கடேசன்.

★

## ஒரே வீட்டுக்கா?

மனைவி:—பஞ்சம் வருகிறது, வருகிறது என்கிறார்களே! உங்களுக்கும் வேலை போய் விட்டதே. என்ன செய்யப் போகிறீர்கள்?

கணவன்:—பயப்படாதே! நான் சொல்லுகிறபடி கேள். நீ உன் அம்மா வீட்டுக்குப் போய்விடு. குழந்தைகள் பாட்டி வீட்டுக்குப் போகட்டும். நான் என் மாமியார் வீட்டுக்குப் போய்விடுகிறேன்!

—பிரியலோசனு.

## ஒரே அடையாளம்

"என்ன ஐயா இது? அந்தான் வீடு என்று சொன்னால் பட்டணத்தில் எப்படிக் கண்டு பிடிப்பது? தெருப் பெயர், வீட்டு நம்பர், இல்லை, ஏதாவது அடையாளம்—ஒன்றுமே தெரியாதா?"

"உம்......ஒரு அடையாளம் தெரியும்!"

"என்ன அது?"

"மாடியில் ஏறிப் பார்த்தால் 'லைட் ஹவுஸ்' தெரியும்!"

—எஸ். ஆர். மோகன்ராம்.

★

## வரவில்லை!

கலியாணத்தின் போது, புரோகிதர் மண மகளிடம் ஆகாயத்திலிருந்த ஒரு நட்சத் திரத்தைச் சுட்டிக் காட்டி "அருந்ததியைப் பார்த்தாயா?" என்று மணப் பெண்ணைக் கேட்கச் சொன்னார். மணமகனும் அவ்வண்ணமே மணமகளைக் கேட்டான்.

மணமகள் (ஏதோ ஞாபகமாக):—இல்லை. அந்தப் படம் இந்த ஊருக்கு இன்னும் வரவே யில்லையே! —சேது.

★

## உடம்புக்கு ஆகாது!

ஓட்டல் சுப்பய்யர் மகன் சோமு தன் அம்மாவைப் பார்ப்பதற்காகச் சென்னையிலிருந்து தஞ்சாவூருக்குப் போனான்.

சோமு:—அம்மா, நீ சிரமப்படாதே! நான் நம் ஓட்டலுக்குப் போய், அப்பாவையும் பார்த்து விட்டு, அப்படியே சாப்பிட்டு விட்டும் வந்து விடுகிறேன்.

தாயார்:—வேண்டாமடா, சொல்வதைக் கேள். ரயில் பிரயாணத்திலிருந்து வந்திருக்கிறாய்! ஓட்டல் சாப்பாடு உடம்புக்கு ஆகாது. ஒரு நொடியில் சாதம் வடித்துப் போட்டு விடுகிறேன்!

—"வெங்கன்"

★

## உண்மை!

தகப்பனார்:—ஏண்டா, என்னிடம் பொய்யா சொன்னாய்? இந்தப் புஸ்தகம் குத்துச் சண்டையில் நீ ஜயித்ததற்காகக் கிடைத்தது என்றாயே! இது கணக்கில் முதலாக இருந்த



தற்காக வேறு யாரோ ஒரு பையனுக் கல்லவா கொடுத்திருக்கிறார்கள்?

பிள்ளை:—ஆம் அப்பா, அந்தப் பையனைத் தான் நான் குத்துச் சண்டையில் ஜயித்துப் புஸ்தகத்தைப் பிடுங்கிக் கொண்டு வந்தேன்!

—டி. நடராஜன்.




# கம்பர் தரும் காட்சி

## 135. வந்தது கோபம்!

★ ○ ★

பர்ணசாலையில் ராமன் தியானத்தில் இருந்தபோது கரனது அரக்க வீரர்கள் சுற்றி நின்றதையும், விழித்துப் பார்த்து விஷயம் தெரிந்து லக்ஷ்மணன் கையிலிருந்து வில்லை ராமன் வாங்கிக் கொண்டதையும் பார்த்தோம்.

வில்லை வாங்கிக் கொண்டான் ராமன். வாளையும் அரையில் செருகிக் கொண்டான். அம்பராத் தூணியையும் முதுகில் கட்டிக் கொண்டான். அப்படியே பர்ணசாலையை விட்டு வெளியே வந்து அரக்கர்களைப் பார்த்து வீராவேசத்தோடு "இப்படி வாருங்கடா" என்கிறான்.

வாங்கி, வாளொடு
வாளிபெய் புட்டிலும்

தாங்கித் தாமரைக்
கண்ணன்அச் சாலையை

நீங்கி, 'இவ்வழி
நேர்மின்அ டா'என,

வீங்கு தோளன்
மலைதலை மேயினான்.

[வாளிபெய் புட்டிலும்: அம்பு நிறைந்த அம்பராத் தூணியும்; தாமரைக் கண்ணன்: ராமன்; இவ்வழி நேர்மின் அடா என: இப்படி எனக்கு நேரே வாருங்கள் பயல்களா! என்று சொல்லவும்; வீங்கு தோளன்: வீர உணர்ச்சி காரணமாக வீங்கிய தோள் கொண்ட ராமன்; மலைதலை மேயினான்: போர் புரிய ஆரம்பித்து விட்டான்.]

ராமன் போர் செய்ய ஆரம்பித்தான். அவ்வளவுதான்: மரங்களும் கிளைகளும் போல் எதிர்ட்டு நின்ற அரக்கரின் தோள்களும் வாள்களும் என்ன ஆயின!

மரங்கள் போல்நெடு
வாளொடு தோள்விழ:

உரங்க ளான்அடர்ந் —
தார்க்(கு)உர வோன்விடும்

சரங்கள் ஓடின
தைக்க,அ வர்கள்தம்

சிரங்கள் ஓடின, —
தீயவன் ஓடினான்!

[உரங்களான் அடர்ந்தார்க்கு: தோள்கள் அற்று விழவும், மார்பு கொண்டே ராமனை மோத வந்த அரக்கர்களுக்கு என்ன நேர்ந்தது, பார்க்கலாம்; உரம்: மார்பு — மலை போலப் பருத்த மார்பு: உரவோன் விடும் சரங்கள் ஓடின தைக்க: வலிபடைத்த ராமன் விடும் அம்புகள் ஓடித் தைக்கவும்; அவர்கள்தம் சிரங்கள் ஓடின: அந்தப் பதினாறு அரக்கர்களுடைய தலைகள் அறுபட்டு எங்கேயோ போய் விழுந்தன; தீயவள் ஓடினாள்: சூர்ப்பனகை என்ன செய்வாள்! ஓட்டம் பிடித்தாள்.

பதினாறு பேரும் ஒரு நொடியில் தீர்ந்தார்கள் என்ற துரித பாவத்தைச் செய்யுளில் நன்றாய்ப் பார்க்கலாம். சரங்கள் ஓடின, சிரங்கள் ஓடின, தீயவள் ஓடினாள் என்ற அவசர ஓட்டத்தில் கழுத்து அறுபட்டன என்று சொல்ல அவகாசம் இல்லைபோலும்!]

ஒரு காட்டில் யானைக் கூட்டம் வந்து நிற்கிறது. சிங்கம் ஒன்று வந்து கொம்பன் களை யெல்லாம் கொன்று விட்டது. பெண் யானை ஒன்று துதிக்கையைத் தூக்கிய வண்ணமாய் அவ்விடத்தை விட்டு அலறிக் கொண்டு ஓடுகிறது.

சூர்ப்பனகை கரனைத் தேடிக் கொண்டு ஓடியது அந்த விதமாக இருந்ததாம்!

ஒளிறு வேல்கரற்(கு)
உற்ற(து) உணர்த்தினள்;

குளிறு கோபவெங்
கோளரி மாஅடக்,

களி(று)எ லாம்படக்
கைதலை மேலுறப்

பிளிறி யோடும்
பிடியன்ன பெற்றியாள்

[ஒளிறு வேல்கரற்கு: பிரகாசிக்கும் வேலை ஏந்திய கரனிடத்தில்; உற்றது உணர்த்தினாள்: பதினாலு அரக்கர்களுக்கும் நேர்ந்த முடிவை எடுத்துச் சொன்னாள்; எப்படி ஓடி வந்தாள் என்பதைப் பார்க்கலாம்:—குளிறு: கர்ச்சிக்கிற; கோப வெங்கோளரி மா அட: ஆங்காரமும் திடமும் பொருந்திய ஆண் சிங்கம் தாக்கவும்; களிறு எலாம்பட: ஆண் யானைகள் எல்லாம் இறந்து விழ; கை தலை மேல் உற: துதிக்கையைத் தலைமேல்த் தூக்கிய வண்ணமாய்; பிளிறி யோடும் பிடி அன்ன பெற்றியாள்: அலறியோடும் பெண் யானையை ஒத்த சூர்ப்பனகை—உற்றது உணர்த்தினாள்.]

அரக்கர்கள் இறந்தொழிந்தார்கள் என்ற வார்த்தையைக் கேட்டான் கரன்: கோபாவேசம் பொங்கி விட்டது. கண் ஒரே சிவப்பாய்ச் சிவந்தது; கலங்கியது. துளித்த கண்ணீர் இரத்தத் துளியாகத் தோன்றியது.

அங்(கு)அ ரக்கர்
அவிந்தழிந் தாரெனப்,

பொங்(கு)அ ரத்தம்
விழிவழி போந்துக,

வெம்க ரப்பெய—
ரோன்வெகுண் டான்விடைச்

சங்க ரற்கும்
தடுப்பரும் தன்மையான்.

[அவிந்து அழிந்தார் என: இறந்து ஒழிந்தார்கள் என்று சொன்ன மாத்திரத்தில்; வெம் கரப் பெயரோன்: யாரும் அஞ்சும்படியான கரன் என்னும் பெயரை யுடையவனான அந்த அரக்கன்; வெகுண்டான்: என்றும் இல்லாத கோபத்துக்கு உள்ளானான்; விடைச் சங்கரற்கும் தடுப்பரும் தன்மையான்: ரிஷப வாகனரான ருத்ரமூர்த்தியாலும் எதிர்க்க முடியாத வீரப்போர் வல்லவன்.]

கொஞ்சம் கொஞ்சமாக நமக்குக் கரனை அறிமுகப் படுத்துகிறார் கவிஞர். சரித்திரம் இனிமேல்த்தான் வரப்போகிறது.



'வெள்ளி விழா' 'தங்க விழா' என்பார்கள். அங்கே வெள்ளியையும் தங்கத்தையும் காணக்கூட முடியாது. அவ்விதமின்றி, கோஜா முஸ்லிம்களின் பரம குருவாகிய ஆகாகானின் வைர விழாவை, அவருடைய சீடர்கள் உண்மையான வைர விழாவாகக் கொண்டாடினார்கள்! ஆகாகான் அவர்களை எடை போட்டுப் பார்த்து அந்த அளவு வைரத்தை அவருக்கு அளித்தார்கள். பம்பாயில் இம்மாத ஆரம்பத்தில் நடந்த அந்த வைர விழா வைபவத்தின் காட்சியை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

# யார் கடிதம்?

எஸ். வி. எஸ்.

"போஸ்ட்" என்று ஒரு குரல் வந்தது. அத்துடன் டப் என்று ஒரு கவரும் விழுந்தது. நான் ரொம்ப ஆவலுடன் எடுக்கப் போனேன். அதை ஸென்ஸார்காரர்கள் ஏற்கெனவே திறந்திருந்தார்கள். "நமக்கு வருகிற கடிதங்களைத் திறந்து படிப்பதில் இவர்களுக்கு என்ன உற்சாகம் இருக்கப் போகிறது?" என்று சொல்லிக் கொண்டே திறந்தேன். யாருக்கு விலாசம் எழுதியிருக்கிறது என்பதைக்கூடக் கவனிக்காமலேதான் திறந்தேன்.

இதைக் கேட்டுக் கொண்டுவந்த லக்ஷ்மி "அப்படிச் சொல்லாதீர்கள். அந்த ஸென்ஸார்காரர்களுக்கும் ஏதாகிலும் சுவாரஸ்யமிருக்கும். வேண்டுமானால், நிஜமாக நடந்த சம்பவம் ஒன்றைச் சொல்லுகிறேன் கேளுங்களேன்: ஆனால் எனக்குச் சொல்லத்தான் சற்று வெட்கமாக இருக்கிறது!" என்று அடிபோட்டு விட்டு நிறுத்தி விட்டாள்.

"என்னிடம் வெட்கப் படுவானேன்? சும்மா சொல், பரவாயில்லை!" என்றேன்.

லக்ஷ்மி, ஆரம்பித்தாள்:

"நமக்குக் கலியாணமாகி மூன்று வருஷம் இராது! ஓ, பேஷாக இருக்கும். அப்போதிலிருந்தே எனக்குக் கடிதம் வர ஆரம்பித்து விட்டது. யார் எழுதுவார்கள்? — நீங்கள்தான். வாரத்துக்கு இரண்டு கடிதங்கள் தவறாமல் எழுதுவீர்களே, அப்போதெல்லாம் என்ன என்னவெல்லாமோ எழுதுவீர்கள்! அதையெல்லாம் நினைத்துக் கொண்டால் 'அப்படியெல்லாம் எழுதின மனுஷனா இப்போது என் எதிரில் நிற்பவர்?' என்றுகூடத் தோன்றுகிறது.

"அப்பாவுக்கு வரும் கடிதங்கள் சில ஸென்ஸாரால் உடைக்கப்பட்டிருக்கும்; சில திறக்கப்படாமலே வந்துவிடும். ஆனால் நீங்கள் எனக்கு எழுதும் கடிதங்கள் மட்டும் எப்பொழுதுமே உடைக்கப்பட்டு வரும். இது ஒவ்வொரு சமயம் மனசுக்கு வருத்தத்தை யளிக்கும். எனக்கு என்று எழுதும் விஷயங்களை நடுவில் எவனோ ஒருவன் படிக்கிறானே என்றிருக்கும்.

"எப்படியும் வாரத்துக்கு இரண்டு முறை உங்கள் கடிதம் வரும். உங்களைத் தவிர வேறு யார் எனக்குக் கடிதம் எழுதுவார்கள்? உங்கள் கடிதம் தான் என்று சர்வ நிச்சயமாக நினைத்துக்கொண்டு அன்று அப்பா கொடுத்த கடிதத்தைப் பார்த்தேன். எனக்குத் திடுக்கிட்டது. மேல் விலாசத்தின் கையெழுத்து உங்களுது அல்ல! எனக்கு உள்ளும் புறமும் ஒரே நடுக்கம் ஏற்பட்டது. வேற்று மனிதர் யாரும் கடிதம் எழுதி அதுவரை நான் பெற்றதில்லையல்லவா!

"என்ன எழுதியிருக்குமோ, யார் எழுதியிருக்கிறார்களோ என்று பயந்து கொண்டே திறந்தபோது கடிதத்தின் நடையும் மனோபாவமும் மனசுக்கு ஒருவித அமைதி தந்தது.

"இப்போது எனக்குக் கடிதத்தின் வாசகங்கள் அப்படியே ஞாபகமில்லையென்றாலும் சில சில வாக்கியங்கள் மனசில் பல நாள் ஒலித்துக் கொண்டிருந்தன. ஏன்? இப்பொழுதுகூடச் சொல்ல முடியும் போலிருக்கிறதே:

தர்மம் செய்பவனுக்குச் சந்தோஷம் உண்டாகிறது. தர்மத்தைப் பெறுகிறவனுக்கும் சந்தோஷம் ஏற்படுகிறது. அதுபோலவே கடிதம் எழுதுபவனுக்கும் கடிதம் பெறுகிறவனுக்கும் சந்தோஷம் ஏற்படுகிறது என்று சொல்லுவார்கள். ஆனால் கடிதம் எழுதுபவனுக்கும், பெறுபவனுக்கும் இடையில் ஸென்ஸார் ஆபீசில் வருகிற போகிற கடிதங்களைப் படிக்கும் எனக்கு எவ்வித சந்தோஷமோ அமைதியோ கிடையாது. இவ்வளவு உப்பு சப்பற்ற கடிதங்களைப் பார்க்கும் போது 'எப்படி ஒருவன் சந்தோஷத்துடன் இதை எழுதியிருக்கக்கூடும்? எப்படி இது சந்தோஷத்தை அளிக்கக்கூடும்?' என்றுகூட நான் எண்ணியது உண்டு. ஆனால் இந்தக் கடிதக் குவியல்களில் மண்டிக் கிடக்கும் போது வாரத்தில் ஓரிரண்டு நாட்கள் சந்தோஷம் ஏற்படும். எப்படி என்று கேட்கிறீர்களா? — தங்களுக்கு வரும் கடிதத்தைப் படிக்கும்போதும் தாங்கள் தங்கள் அருமைக் கணவருக்கு எழுதும் கடிதங்களைப் படிக்கும் போதுந்தான்.

இதைக் கேட்க உங்களுக்கு என்மேல் கோபம் வரும். என்ன செய்வது? உங்கள் கடிதங்களையெல்லாம் படிக்க வேண்டியது என் கடமை. இந்தக் கடமையில் சற்று சந்தோஷம் ஏற்பட்டால் அது தவறு? அதற்கு நான் நன்றி செலுத்துவதும் தவறு அல்ல என்று நினைக்கிறேன். ஆகவே என் மனப்பூர்வமான நன்றியைச் செலுத்தவே உங்களுக்கு இதை எழுதினேன். மன்னிக்கவும்.

இப்படிக்கு,
அசடு.

"இவ்விதம் எழுதியிருந்த கடிதத்தின் கீழே பின் குறிப்பு ஒன்றும் இருந்தது:

கையொப்பம் புது விதமாக இருக்கிறது என்று யோசிக்கிறீர்களா? 'தணிக்கை

ஆபீஸில் யாரோ ஒரு அசடு நம் கடிதங்களைத் திறந்து படிக்கிறான். அதனால் அவை நமக்கு வந்து சேரக் கால தாமதம் ஆகிறது' என்று தங்கள் கணவர் என்னை அன்புடன் போற்றும்போது நான் அந்தப் பட்டத்தை ஏன் விட்டுக் கொடுக்க வேண்டும்? அப்படியொன்றும் அவர் எழுதியதாக ஞாபகமில்லையே என்பீர்கள். பொறுத்திருந்து நாளைக்கு வரும் கடிதத்தைப் பாருங்கள்.

"அப்படியே அடுத்த நாள் உங்கள் கடிதமும் வந்தது. அதில் நீங்கள் அந்தத் தணிக்கை அதிகாரி எழுதியபடியே அவரை அசடு என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள்.

"தணிக்கைக்காரர்களுக்கு நம் கடிதங்களைப் படிப்பதில் என்ன சுவாரஸ்யம் இருக்கும் என்றீர்களே? இதைக் காட்டிலும் என்ன சுவாரஸ்யம் வேண்டும்?"

* * *

லக்ஷ்மி மேற் கண்டவாறு கதை சொல்லி முடித்ததும், "ரொம்ப சுவாரஸ்யமான பிழைப்புத்தான். இந்தா, இன்றைக்குக்கூட உனக்குத்தான் கடிதம் வந்திருக்கிறது. கவனிக்காமல் பிரித்துவிட்டேன்" என்று சொல்லிக் கடிதத்தை அவளிடம் கொடுத்தேன்.

பிரித்துப் பார்த்ததும் அவளுடைய ஆச்சர்யம் தாங்கவில்லை. "அவ்வளவு விஷமமும் இவள்தானா? நீங்கள் அசடு என்று குறித்திருந்தீர்களே, அவளுக்குக் கலியாணமாம்!" என்றாள்.

"அவள், — இது என்ன கூத்து?" என்றேன்.

"ஆமாம், அவள் என் பால்ய சகி சுசீலா. அந்தக் காலத்திலேயே சுசீலா ரொம்ப விஷமக்காரி. அந்த விஷமம் இன்னும் அவளை விடவில்லை போலிருக்கிறது.

"அவள் பி. ஏ. பாஸ் பண்ணியவுடன் யுத்தகால வேலைகளில் ஒன்றாகிய தபால் தணிக்கை ஆபீஸில் உத்தியோகமாகியிருந்ததாம். அவளுக்கு இன்னும் இரண்டு வாரத்தில் கலியாணமாம். சீக்கிரத்தில் கலியாணப் பத்திரிகை அனுப்புகிறாளாம். 'நீங்கள் இருவரும் வந்து ஆசீர்வதிக்க வேண்டும்' என்று எழுதியிருக்கிறாள். நம்மிடமிருந்து எப்படி இல்வாழ்க்கை நடத்த வேண்டும் என்றுகூடத் தெரிந்து கொண்டிருக்கிறாளாம். அதற்கு நன்றி செலுத்தியிருக்கிறாள்!" என்றாள் லக்ஷ்மி.



# வான சஞ்சாரம்

இசைத்தேனீ

19உ. சென்னையில் சித்தூர் சுப்ரமணிய பிள்ளையின் ராகம், தானம், பல்லவிக் கச்சேரி நன்றாயமைந்தது. அன்று அவருக்கு சரீரம் சௌகரியமா யிருந்தது. கேதார கௌளையை விஸ்தாரமாய் ஆலாபனை செய்து தானமும் பாடி, 'வடிவேலவனே அடியார்க்கெளியவனே' என்ற பல்லவியை, வைப்பிடிப்பு விந்யாசங்களுடனும், விறுவிறுப்பான ஸ்வரப்ரஸ்தாரங்களுடனும் பொழிந்து தள்ளினார்.

20உ. மீனாக்ஷி ராமகிருஷ்ணனுக்குக் கொடுத்த அரை மணி நேரத்தில், அதற்கு முன் நடந்த தெலுங்கு நாடகத்துக்காக ஐந்து நிமிஷம் எடுத்துக் கொண்டுங்கூட, பாடகி கச்சேரியை ஜமாய்த்து விட்டார். பந்துவராளி ராகத்திலும், 'நின்னு நேர.' 'நாத தனு மனிசம்' கிருதிகளின் நிரவல் ஸ்வரங்களிலும் மதுரை மணியின் வழி பிரதிபலித்தது.

21உ. சென்னையில் கேட்ட கலக்காடு எஸ். மகாதேவனின் கச்சேரி உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. நாட்டக்குரஞ்சி, பூர்வி கல்யாணி ராகங்களும் 'நீது மூர்த்தி' கிருதியும் அழகு வடிவங்களா யிருந்தன.

அன்று திருச்சியில் குறிப்பிட்ட நிகழ்ச்சிக்குப் பதிலாக நடந்த திருச்சி எஸ். ஸ்வாமிநாதய்யரின் முழு நேரக் கச்சேரியும் முதல்தரமானது. நடுத்தர சரீரம், சிறந்த ஞான பாவம், பிர்க்காப் பொழிவு, இவைகொண்டு, தோடி, ஸஹானா, ஸ்ரீரஞ்சனி, ஹம்ஸாநந்தி ராகங்களைக் கலப்பில்லாத சம்பிரதாய முறையில் தேர்த்தியாய்க் கையாண்டார். உருப்படிகளும் கச்சிதமா யிருந்தன.

23உ. சென்னையில் மதுரை டி. வெங்கடேசனின் கானம் வெகு சிறப்பா யிருந்தது. ஆனந்தபைரவிக்கே முதல் ஸ்தானம் கொடுக்கவேண்டும். மலயமாருதத்தை அடுத்தாற்போற் சொல்லலாம். 'அந்தரங்க பக்தி' என்ற கோடீச்வரய்யரின் கிருதி ஷட்விதமார்க்கிணியில் சாதாரணமாய்ப் பாடுவதை மலய மாருதத்தில் பாடியது ஏனோ?

24உ. இரவு. சென்னையில் ஜி. என். பி. வழி பிரதிபலிக்கும் ஒரு கானம் கேட்டது. பைரவி ராகம் வெகு விஸ்தாரமாயும், ஒரு பாகம் நிதானமாயும் இன்னொரு பாகம் அசாத்ய பிர்க்காப் பொழிவுடனும் அமர்க்களமா யிருந்தது. பாடியவர் டி. ஆர். பாலசுப்ரமணியன்.

25உ. திருச்சியில் எஸ். கே. வெங்கடராமனின் பாட்டும் டி. ஆர். நவநீதத்தின் வேணு கானமும் உயர்ந்த ரகமா யிருந்தன. முன்னவர் நய சாரீரத்தில், சிறந்த ஞானபாவத்துடனும், அரிய சாதக பிர்க்காப் பொழிவுடனும், சக்ரவாகம், சங்கராபரணம், வாசஸ்பதி, தோடி ராகங்களையும் உருப்படிகளையும் வெகு விஸ்தாரமாய் வழங்கினார். பின்னவர் தம் வாத்யத்தில் அழகிய நாதத்துடன், வனப்பு வழியாய், ஹரிகாம்போதி, ஷண்முகப்ரியா, பல்லவி ராகமாம் கரஹரப்ரியா, இவைகளைத் திறம்பட வாசித்தார். வயலினுக்கு, பாலசரஸ்வதியும், மிருதங்கத்துக்கு, ரங்கநாயகியுமாக எல்லாம் ஸ்திரீகளின் கச்சேரியாகவே அமைந்தது.

# உதங்கர்

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

**பா**ண்டவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு கிருஷ்ணன் துவாரகைக்குப் போனான். போகும் வழியில் உதங்கர் என்ற பிராமணச் சிரேஷ்டரை வழியில் சந்தித்தான். அவரைக் கண்டதும் தேரை நிறுத்தி இறங்கி நமஸ்காரம் செய்து பூஜித்தான். அவரும் கண்ணனுக்கு மரியாதை செய்து விட்டு,

"மாதவ! பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் சகோதரர்களுக்குள் இருக்க வேண்டிய அன்பு சரியாக இருந்து வருகிறதா? எல்லாரும் சுகமாயிருக்கிறார்களா?" என்று கேட்டார்.

துறவி வாழ்க்கையிலிருந்த பிராமணருக்கு உலக நிகழ்ச்சிகள் ஒன்றுமே எட்டவில்லை. யுத்தம் நடந்ததே அவருக்குத் தெரியவில்லை. அவருடைய கேள்வியைக் கேட்டுக் கண்ணன் ஒரு நிமிஷம் திகைத்தான். என்ன சொல்லுவது என்று தோன்றாமல் நின்றான். பிறகு "ஐயா! கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் கோரமான யுத்தம் நடந்து விட்டது. சமாதானம் செய்ய நான் எவ்வளவோ முயன்றேன். அவர்கள் கேட்கவில்லை. யுத்தத்தில் அனைவரும் மாண்டார்கள். விதியை யாரும் மீற முடியாது" என்று சொல்லி நடந்த வரலாற்றையெல்லாம் சொன்னான்.

இதைக் கேட்டதும் உதங்கர் கோபாவேசமானார். கண்கள் சிவந்து போய் மாதவனைப் பார்த்துச் சொன்னார்:

"வாசுதேவா! நீ பக்கத்தில் இருந்தும் இவ்வாறு ஆயிற்றா? அவர்களைக் காப்பாற்றாமல் போனாய். நீ கபடமாக வேலை செய்து அவர்கள் அழிந்து போக விட்டு விட்டாய். நான் உனக்குச் சாபம் தரப் போகிறேன்" என்றார்.

வாசுதேவன் புன்னகை புரிந்து "சாந்தம்! சாந்தம்! தபஸ்வியான நீர் உம்முடைய தவத்தின் பயனைக் கோபத்தில் இழந்து விடாதீர். முதலில் நான் சொல்லுவதைக் கேளும். பிறகு வேண்டுமானால் சாபத்தைக் கொடும்" என்று சமாதானப் படுத்தினான்.

கண்ணன் உதங்கருக்கு ஞானக்கண் கொடுத்துத் தன் விசுவரூபத்தைக் காட்டினான். "உலகத்தைக் காப்பதற்காகவும் தருமத்தை நிலை நிறுத்துவதற்காகவும் பல பிறவிகள் நான் எடுத்து வருகிறேன். நான் எந்த அவதாரத்தை எடுக்கிறேனோ அந்த அவதாரத்தின் தருமத்தை அனுசரிக்கிறேன். தேவ ஜாதியில் பிறக்கும்போது தேவனைப் போல் எல்லாவற்றையும் செய்வேன். யக்ஷனாகப் பிறந்தால் யக்ஷனைப் போல்

எல்லாக் காரியங்களையும் செய்வேன். மனிதனாகப் பிறந்தாலும் மிருகமாகப் பிறந்தாலும் அவ்வாறு அந்த அவதாரத்துக்கு இசைந்தவாறே காரியத்தை முடிப்பேன். அவிவேகிகளான கௌரவர்களைக் கெஞ்சினேன். அவர்கள் அகங்காரத்தால் மதிமயங்கி என்னுடைய வார்த்தைகளை ஏற்றுக் கொள்ளவில்லை. பயமுறுத்திப் பார்த்தேன். அதற்கும் அவர்கள் இணங்கவில்லை. கோபங்கொண்டு என் விசுவரூபத்தையும் அவர்களுக்குக் காட்டினேன். அதுவும் வீணாயிற்று. அவர்கள் அதருமத்தைச் செய்வதிலேயே பிடிவாதமாக இருந்தார்கள். யுத்தத்தில் பிரவேசித்து உயிர் நீத்தார்கள். பிராமணச் சிரேஷ்டரே! என் மேல் உமக்குக் கோபத்துக்குக் காரணம் இல்லை'' என்றான்.

உதங்கர் சாந்தம் அடைந்தார். அதைக் கண்டு கண்ணன் மகிழ்ச்சியடைந்து ''உமக்கு ஒரு வரம் தர விரும்புகிறேன். எதையேனும் கேளும்'' என்றான்.

''அச்சுதா! உன்னை நான் பார்த்ததும் உன் விசுவரூபத்தைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றதும் போதாதா? எனக்கு வேறொரு வரமும் வேண்டாம்'' என்று உதங்கர் சொன்னார்.

ஆனால் கண்ணன் மறுபடியும் வற்புறுத்த, பாலைவனத்தில் திரிபவரும் ஆசையற்றவருமான உதங்கர் ''பிரபுவே! அவசியம் எனக்கு ஏதேனும் கொடுக்க நீ விரும்பினால், நான் எந்த இடத்தில் எப்போது தாகத்துக்குத் தண்ணீர் வேண்டினாலும் அது கிடைக்குமாறு வரம் தருவாயாக'' என்றார். ''இவ்வளவுதானா?'' என்று கண்ணன் சிரித்து ''அப்படியே ஆகட்டும்!'' என்று சொல்லிவிட்டுத் துவாரகை சென்றான்.

* * *

பிறகு ஒருநாள் உதங்கர் பாலைவனத்தில் தாகம் மிகுந்து தண்ணீருக்காகக் காட்டில் இங்குமங்கும் அலைந்து கிடைக்காமல் அச்சுதனை நினைத்தார். உடனே ஒரு புலையன் தோன்றினான். அவன் உடம்புக்குப் போதிய ஆடையில்லை. உடுத்திருந்த கந்தல் துணியும் அழுக்குப் படிந்து அவலட்சணமாக இருந்தது. கூட நான்கு ஐந்து வேட்டை நாய்கள். கையில் வில்லு, தோளில் ஒரு தோற்பை. அந்தத் தோற்பையில் குடி தண்ணீர் இருந்தது.

புலையன் நகைத்துக்கொண்டு உதங்கரைப் பார்த்து, ''தாகத்தால் வருந்துகிறீர் போலும்! உம்மைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. தண்ணீர் பெற்றுக் கொள்ளும்'' என்று தோற்பையின் குழாயை நீட்டினான்.

புலையனையும் அவன் குடி தண்ணீர்ப் பையையும் நாய்களையும் பார்த்து உதங்கர் மிக்க அருவருப்படைந்து, ''வேண்டாம்!'' என்றார்.

கண்ணனை மனதில் எண்ணி ''இதுவா உன் வரம்?'' என்று நொந்து கொண்டார். புலையன் ஜலத்தைப் பெற்றுக் கொள்ளும்படி தோற்பையைக் காட்டி உதங்கரைப் பலமுறை வற்புறுத்தினான். அவருடைய கோபம் வரவர அதிகரித்து மறுத்து விட்டார். புலையன் நாய்களோடு மறைந்து போனான்.

* * *

புலையன் இவ்வாறு அந்தர்த்தானமானதைக் கண்டு உதங்கர் யோசிக்கலானார். ''இது யார்? இது புலையனல்ல. பரீட்சையாகவே இருக்க வேண்டும். பிழை செய்தேன். என்னுடைய ஞானம் என்ன பயன் தந்தது? புலையன் கொடுக்க வந்த ஜலத்தை நான் ஏன் மறுத்தேன்?'' என்று வருந்தினார்.

கொஞ்ச நேரம் கழித்துச் சங்கும் சக்கரமும் ஏந்திக்கொண்டு பகவான் மாதவன் உதங்கர் முன் நின்றான்.

''புருஷோத்தமா! நீ என்னை இவ்வாறு பரீட்சை செய்யலாமா? புலையனுடைய தோற்பையிலுள்ள அசுத்த ஜலத்தை பிராமணனாகிய எனக்குக் கொடுக்கச் செய்வது? இது தருமமா?'' என்று உதங்கர் வருத்தத்துடன் பகவானைக் கேட்டார்.

ஜனார்த்தனன் சிரித்து ''ஓய்! உதங்கரே! உமக்காக நான் இந்திரனிடம் சொல்லி அமிர்தத்தை எடுத்துப் போகச் சொன்னேன். அவன் 'மானிடனுக்குச் சாகா மருந்து கொடுக்க இயலாது. வேறு ஏதேனும் செய்யலாமே?' என்றான். நான் அவனை வற்புறுத்தினதில் அவன் ஒப்புக்கொண்டு 'சரி, அப்படியே செய்கிறேன். ஜல ரூபமாக அமிருதத்தை எடுத்துச் சென்று உதங்கருக்குத் தருவேன். ஆனால் நான் சண்டாள வேஷத்தில் போவேன். என்னிடமிருந்து குடி தண்ணீர் வாங்கிக் குடிக்க அவர் ஒப்புக் கொண்டால் சரி!' என்றான். நீர் ஞானி, புலையனுடைய வேஷத்தைக் கண்டு வெறுக்கமாட்டீர் என்று நான் நம்பி அவ்வாறே செய்யச் சொன்னேன். நீர் இவ்விதம் நடந்து கொண்டதால் நான் தோற்றேன்'' என்றான்.

தேடி வந்த அமிர்தத்தை இழந்த உதங்கர் வெட்கத்தில் ஆழ்ந்தார்.

# காத்திருந்ததற்காகக் களிப்படைவீர்கள்-

## பேவர் - லூபா கடிகாரங்கள் யதேஷ்டமாகக் கிடைக்கும் ஒரு நாள் வரும்



தற்சமயம் பேவர் - லூபா கடிகாரங்கள் கிடைப்பது அரிதாயுள்ளது. ஆம்! மிக்க அழகுடன் நன்கு நீடித்து உழைக்கக் கூடிய பேவர் - லூபா கடிகாரங்கள் யதேஷ்டமாகக் கிடைக்கும் ஒரு நாள் வரும். அப்படி வரும் புதிய கடிகாரங்களை நீங்கள் காணும்போது இத்தனை நாட்கள் இவைகளுக்காகக் காத்திருந்தது மிகவும் தகும் என ஒப்புக் கொள்வீர்கள்.




**FAVRE-LEUBA**

பேவர் - லூபா & கம்பெனி லிமிடெட்.

பம்பாய் கல்கத்தா

Ad. No. 174

# மிருதுலதா



**சசிதேவி**

மாசி மாதம். ஒரு நாள் விடியற்காலை. பின் பனி தேகத்தைத் துளைக்குமாறு கொட்டுகிறது. தஞ்சாவூர் காவேரி ஆற்றங் கரையில் இரண்டு வாலிபர்கள் பேசியபடி அமர்ந்திருக்கிறார்கள்.

காவேரியில் அரித்துக்கொண்டு ஓடும் தண்ணீரின் சலசலப்பைத் தவிர வேறு சத்த மில்லை. இன்னும் சந்திராஸ்தமனம் ஆகவில்லை. தேய்ந்து மங்கிக் கொண்டே வந்த சந்திரனின் ஒளியானது, யௌவனப் பிராயத்தைக் கடந்த ஸ்திரீயின் சௌந்தரியத்தைப் போன்று வெளிறடைந்திருந்தது. மனதுக்குச் சலிப்பைத் தருவதாக இருந்தது.

"வாசு! நீ பாடிக் கேட்டு ரொம்ப நாளாகிறது! எங்கே ஒரு பாட்டுப் பாடு, கேட்கலாம்" என்றான் அந்த இருவரில் ஒருவன்.

உடனே வாசுவும் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "என்ன பாட்டுப் பாடட்டும், சந்துரு?" என்று கேட்டான்.

"உன் இஷ்டப்படி எது வேண்டுமானாலும் பாடேன்" என்றான் சந்துரு.

வாசு 'வெண்ணிலா'ப் பாட்டை ராகமாலிகையாகப் பாட ஆரம்பித்தான். மெய்மறந்து கேட்டுக் கொண்டே வந்தான் சந்துரு. அவன் கண்களில் நீர் துளித்தது. அதைக் கவனித்த வாசு, "சந்துரு! ஏண்டா வருத்தப்படுகிறாய்? என் பாட்டு நீ அழும்படியாகவா இருக்கிறது?" என்று கேட்டான்.

"போடா! உனக்கு எப்பொழுதும் பரிகாசம்தான். நீ அந்தப் பாட்டைப் பாட ஆரம்பித்ததுமே என் மனம் பழைய நினைவுகளில் சென்று விட்டது" என்றான்.

"அந்தப் பாட்டில் அப்படி என்ன இருந்தது?"

"அதை உனக்குச் சொல்ல வேண்டுமானால் ஆதி முதல் என் கதையைச் சொல்ல வேண்டும்."

"அதைத்தான் கொஞ்சம் சொல்லேன், கேட்கலாம்!"

"என் தங்கையை உனக்குத் தெரியுமல்லவா வாசு?"

"நன்றாகத் தெரியுமே! 'மிருது லதா'வைத்தானே சொல்லுகிறாய்?"

"ஆமாம்" என்று சொல்லி விட்டு, சந்துரு கதையை ஆரம்பித்தான்.

“என் பெற்றோர்களுக்கு நாங்கள் இருவரும்தான் குழந்தைகள். எங்களை மிகவும் செல்வமாக வளர்த்து வந்தார்கள் அது எவ்வளவு கெடுதலானது என்பதைப் பிற்கால வாழ்க்கை எங்களுக்கு உணர்த்திற்று. அதிலும், என் தங்கைதான் வீட்டில் எல்லோருக்குமே அருமையானவள். படிப்பில் அவள் பள்ளிக்கூடத்திலேயே முதன்மையாக விளங்கினாள். சங்கீத ஞானம் அபாரம். பதினைந்து வயதுவரையில் அவள் ஒருவிதமான கவலைகளுமின்றி வளர்ந்து வந்தாள். பிறகுதான் ஆரம்பித்தது சனி தசை. என் அப்பா அவளுக்கு வரன் தேட ஆரம்பித்தார். எங்கெங்கோ தேடி அலைந்து விட்டு, கடைசியில் எங்கள் உறவிலேயே பட்டணத்தில் வேலையாக இருந்த ஒரு பையனுக்குக் கொடுப்பதாக முடிவும் செய்து விட்டார். மணமும் முடிந்து விட்டது.

“அப்பொழுது நான் என்னுடைய தஞ்சைப் படிப்பை முடித்துவிட்டு, சென்னை காலேஜ் ஒன்றில் இண்டரில் சேர்ந்திருந்தேன். நானும் என் சகோதரியும் வாரந்தோறும் கடிதம் எழுதிக் கொள்வோம். என் பெயர் சந்திரன் என்பதற்காக, அவள் என்னை ‘நிலா’ என்றே வேடிக்கையாகக் குறிப்பிட்டு எழுதுவாள்.

“சென்னையிலேயே இருந்த கோபுவுடன்—அதாவது மிருதுளாவின் கணவனுடன்—அடிக்கடி சந்தித்துப் பழக எனக்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. இதனால் அவனுடைய நடத்தை அவ்வளவு உயர்ந்ததல்ல என்று எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று. ஆயினும், அவைகளைப் பற்றி யெல்லாம் நான் தஞ்சைக்கு எழுதும் கடிதங்களில் ஒன்றும் எழுதவில்லை.

“கல்யாணத்தின் பொழுதே கோபு ஆடின ஆட்டம் கொஞ்சமல்ல. அப்பொழுதே எனக்கும் என் தாயாருக்கும் மனது திக்கென்றிருந்தது. என் அப்பா மட்டிலும் தன்னால் சமாளிக்க முடியாமற் போனதை விட்டுக் கொடுக்காமல் மழுப்பல் வியாபாரம் நடத்திக் கொண்டு வந்தார்.

“வர வர கோபுவின் மூளை விருத்தியடைய ஆரம்பித்துவிட்டது. அவனுக்கு இல்லாத துர்வழக்கமே கிடையாது என்பது வெளிப்படையாகத் தெரிய ஆரம்பித்து விட்டது. அவைகளைப் பற்றி விசாரிக்கும்படியாக என் தகப்பனார் தங்கைக்குத் தெரியாமல் கடிதம் எழுதினார். அவருக்குத் தெரியாமல் மிருதுளாவும் எழுதியிருந்தாள். நான் என்ன செய்வேன்? கோபுவோ என்னை மதிக்கவே மாட்டான். ஒன்றும் புரியாமல் தவித்தேன். பிறகு யோசித்து, மிருதுளாவைக் கொண்டு வந்து சென்னையில் குடித்தனம் வைக்கும்படிக்கும், அப்பொழுதாவது ஒரு வேளை கோபு திருந்தக் கூடுமென்றும் என் தகப்பனாருக்கு எழுதினேன்.

“சென்னையில் குடித்தனம் வைத்தாயிற்று. சனிக்கிழமைகளில் எனக்கு விடுமுறையாகையால் நான் மிருதுளாவைப் பார்க்கப் போவேன். கோபு வீட்டில் இருக்க மாட்டான். எது தப்பினாலும் அவன் கிண்டி குதிரைப் பந்தயத்துக்குப் போவது மட்டும் தப்பாது. நான் என் தங்கையை எப்பொழுது பார்க்கப் போனாலும், அவள் அழுத கண்ணும், தொழுத கரமுமாகவே இருப்பாள். அவளை அந்த நிலையில் பார்க்கும்போது துக்கம் நெஞ்சை அள்ளிப் பிடுங்கும். எவ்வளவோ மென்மையாக வளர்க்கப்பட்ட கிளியைப் பூனையிடம் கொடுத்ததுபோல் அல்லவா ஆயிற்று அவள் விதி!

“என்னதான் நான் வற்புறுத்திக் கேட்டாலும், அவள் தன் கணவனைப் பற்றி ஒன்றுமே சொல்லமாட்டாள். நான் அவளை

என் மனம் கொண்டவரைச் சபிப்பேன். அவளுக்கு ரோஷம் வந்து விடும். 'அவரை வையாதே, சந்துரு! நான் செய்த வினைக்கு அவர் என்ன பண்ண முடியும்? நீ அவரைப் பற்றி என் எதிரில் தூஷிப்பதை என்னால் தாங்க முடியாது. என்னதான் கஷ்டங்க இருந்தாலும் கொண்ட கணவனை இகழ எந்த ஸ்திரீயின் இதயமும் இடம் கொடுக்காது!' என்று என்னைத் தடுப்பாள். இவ்வளவு மேன்மையான மனைவியை அடைந்தும் நன்றாய் வாழக் கொடுத்து வைக்காத அந்த அபாக்கியசாலியான கோபுவை எண்ணி என் மனது பரிதவிக்கும்.

“இவ்விதம் எப்படியோ இரண்டு வருடங்கள் சென்று விட்டன. மிருதுலதாவின் வாழ்க்கையில் மாறுதலே இல்லை. நான் பி. ஏ. கிளாஸில் படித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுதுதான் நடந்தது ஒரு பெரிய ரகளை. ஒரு நாள் — அன்று சனிக்கிழமை — நான் என் தங்கையைப் பார்க்கப் போனேன். கீழே ஒருவரையும் காணோம். ஒரு வேளை மாடிமேல் இருப்பாளென்று படியேறினேன். என் எதிரில் கோபு அவசரமாக இறங்கி வருவதைக் கண்டேன். அன்று வழக்கத்துக்கு விரோதமாக அவனைச் சந்தித்தது எனக்கு வியப்பாக இருந்தது. என்னைப் பாராதவன்போல் அவன் கீழே இறங்கி வெளியே சென்று விட்டான். நான் மாடிக்குப் போனேன். தரையில் மிருதுலதா படுத்திருப்பதைக் கண்டேன். அவளை என்னதான் எழுப்பிப் பார்த்தும் பயனில்லை. அவள் மூர்ச்சையாகிக் கிடந்தாள். என் மனம் தவித்தது. ஒன்றும் தோன்றாமல் தெருக் கோடியில் இருந்த ஒரு டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு ஓடி வந்தேன். அவர் அவளைப் பரீக்ஷித்துப் பார்த்து விட்டு, 'இது 'ஹிஸ்டீரியா' என்னும் ஒருவிதமான வியாதி. மனக் கவலை ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று சொல்லி மருந்து கொடுத்து விட்டுச் சென்றார்.

“மயக்கம் தெளிந்து எழுந்த மிருதுலதா, என்னைப் பார்த்ததும் அழ ஆரம்பித்து விட்டாள். அவளைச் சமாதானம் செய்து கேட்டதில், அன்று ரேஸுக்குப் போவதற்காகக் கோபு அவளுடைய நகைகளைக் கேட்டதாகவும், அவள் தன்னிடம் ஒன்றுமில்லை என்று சொன்னதாகவும், அதற்காக அவன் அவளை உதைத்துத் தள்ளி விட்டுச் சென்று விட்டதாகவும் சொல்லிக் கதறினாள். என் தகப்பனார் போட்ட நகைகளையெல்லாம் அந்தத் தூர்த்தன் அழித்து விட்டதை அன்றுதான் அவள் என்னிடம் சொன்னாள்.

“நான் அவளைத் தேற்றித் தஞ்சைக்குப் போய்க் கொஞ்ச நாள் இருந்து உடம்பைப் பார்த்துக் கொள்ளும்படி வற்புறுத்தினேன். எப்படியோ கெஞ்சிக் கூத்தாடி கோபுவிடம் உத்தரவு பெற்று மிருதுலதாவைத் தஞ்சாவூருக்குக் கூட்டிக் கொண்டு வந்தேன்.

“மிருதுலதா தஞ்சாவூருக்கு வந்து ஒரு மாதமாகி விட்டது. அவளுடைய சரீரத்திலோ, மனதிலோ தெம்பு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. நாளுக்கு நாள் உடல் மெலிந்து வரலானாள். ஒருவரிடமும் பேச மாட்டாள். எப்பொழுதும் ஏதோ யோசனை செய்பவள் போல் காணப்படுவாள். அவளைத் தேற்ற என்னால் முடிந்த பிரயத்தனங்களெல்லாம் செய்தும் பலனற்று விட்டது. அவளுடைய தேக ஸ்திதி கவலைக்கிடமாகவே இருந்தது.



“மிருதுலதா தஞ்சாவூருக்கு வந்த பிறகு கோபுவுக்கு அநேக கடிதங்கள் எழுதினாள். ஒன்றுக்காவது பதில்

வரவில்லை. என் தந்தை எழுதியும் பதில் கிடையாது. அந்த மூடனைப் பார்க்க வேண்டுமென்று துடித்தாள் பேதை. என்னிடம் அநேக முறை, 'அவரை வரச் சொல்லி எழுதேன், சந்துரு!' என்று மன்றாடுவாள். நான் அதற்கு அசைந்து கொடுப்பதில்லை.

"ஒரு நாள் இரவு. மாடியில் நானும் மிருதுலதாவும் உட்கார்ந்திருந்தோம். வழக்கம் போல் அவள் 'அவரை வரச் சொல்லி ஒரு கடிதம் எழுதேன், சந்துரு!' என்றாள்.



"எனக்குக் கோபம் வந்து விட்டது. 'அவனைப் பற்றி என்னிடம் பேசாதே!' என்று அவள்மேல் எரிந்து விழுந்தேன். 'எனக்கென்னவோ பயமாகவும், அதைரியமாகவும் இருக்கு!' என்று கெஞ்சினாள் அவள். 'நான் இருக்கும்பொழுது உனக்கு என்ன பயம், மிருதுலதா?' என்று கேட்டேன். அதற்கு அவள், 'ஆயிரம் சந்திரர்கள் இருப்பினும், ஒரு சூரியனின் வெளிச்சமின்றிக் கொடிகள் துளிர்ப்பதில்லை யல்லவா?' என்றாள்.

"அவளுடைய பேச்சை மாற்றுவதற்காக 'ஏதோ, ஒரு பாட்டுப் பாடு, கேட்போம்!' என்றேன்.

"இதுவரை எத்தனையோ முறை பாட மறுத்தவள் அன்று நான் சொல்லும் பொழுதே பாட ஆரம்பித்துவிட்டாள். நீ இப்பொழுது பாடினாயே, இதே 'வெண்ணிலா'ப் பாட்டைத்தான் அன்று அவள் பாடினாள்.

'பெண்ணுடன் பிறந்திருந்தும்
வெண்ணிலாவே!—என்
பெண்மைகண்டு காயலாமோ
வெண்ணிலாவே!'

என்று அவள் மோகனத்தில் மேல் ஸ்தாயியில் பாடியபோது, வானத்துச் சந்திரனைப் பார்த்துத்தான் பாடினாளா, அல்லது பெண்மை அறியாத பேயனாகிய என்னைக் கண்டுதான் பாடினாளா என்பது எனக்கு விளங்க வில்லை. பாட்டில் என்னையும் இந்த உலகத்தையுமே மறந்திருந்த நான், சிறிது நேரம் கழித்துச் சுய உணர்வு வந்து பார்க்கும் பொழுது, வழக்கம்போல் அவள் மயக்கத்தால் கீழே சாய்ந்து கிடந்தாள். அன்று தான் நான் அவளுடன் கடைசியாகப் பேசியது. பிறகு அவள் எழுந்திருக்கவே யில்லை!" என்று சொல்லித் தன் கதையை முடித்தான் சந்துரு.

* * *

அதுவரை பேசாமல் கேட்டுக்கொண்டிருந்த வாசு, "கடைசிவரை கோபு வரவே இல்லையா?" என்று கேட்டான்.

"ஆஹா! வந்தான். வந்து என்ன பயன்? அவனைக் காணத் துடித்துக் கொண்டிருந்த இதயம் வெடித்தபின் வந்தான்! — அதோ பார், வாசு! அக்கரையில் எவ்வளவு பருத்திச் செடிகள் வளர்ந்திருக்கின்றன! அவைகளைப் பார்த்தால் உனக்கு என்ன தோன்றுகிறது?" என்று கேட்டான் சந்துரு.

"உன்னுடைய புதிர்களெல்லாம் எனக்குப் புரியுமா, அப்பா?"

"என் மிருதுலதாவின் வாழ்க்கை அந்தப் பருத்திச் செடிகளின் வாழ்க்கையைப் போல்தான் முடிந்து விட்டது. இவ்வளவு நாட்களாக நாமும் பார்க்கிறோமே, அந்தச் செடிகள் பசுமையான காய்களுடன் பூத்துப் பூரித்துக் குலுங்கும்போது அதன் சொந்தக்காரன் அவைகளை அணுகுகிறானா? இல்லை. எத்தனையோ நாட்கள் காத்திருந்து, கடைசியில் வருத்தம் தாங்காமல் இதயம் வெடித்து அவை மடிந்த பிறகுதானே அவன் வருகிறான்!" என்று சொல்லிக் கொண்டே வானத்தை நோக்கினான் சந்துரு.

மேற்கே சந்திரன் மறைந்து, கிழக்கே அருணன் உதயமானான்.




எஸ். ராமு

நாட்டில் உணவுப் பஞ்சம் ஏற்பட்டிருப்பதைக் கேள்விப்பட்ட சிங்கராஜாவுக்கு நம் காட்டிலும் எங்கே பஞ்சம் வந்து விடுமோ என்ற பயம் பிடித்துக் கொண்டது. ஆகவே, காட்டிலுள்ள எல்லா உணவுப் பொருள்களுக்கும் 'ரேஷன்' வைத்துவிட்டது. அதற்குரிய சட்டங்களும், கட்டு திட்டமும் அமுலுக்கு வந்தன.

ஆனால், இது சில மிருகங்களுக்குப் பிடிக்கவில்லை. "தானாகக் கிடைக்கும் பொருள்களுக்குக் கூடவா ரேஷன்?" என்று முணுமுணுத்தன. "எங்களுக்கு இன்னும் அதிகப் பழங்கள் கொடுக்கவேண்டும்" என்று கண்டனத் தீர்மானம் அனுப்பின கிளிக் கூட்டங்கள். "இன்னும் ஒரு மணி நேரமாவது அதிகப்படி மேய விடவேண்டும்" என்று ஆட்டு மந்தைகள் ஊர்வலம் வந்தன. இப்படி ஊர்வலங்களும், கண்டனத் தீர்மானங்களும் ஆங்காங்கு கிளம்ப ஆரம்பித்தன.

வௌவால்கள் இவற்றைச் சாதகமாக வைத்துக் கொண்டு கள்ள மார்க்கெட் வைத்துக் கொள்ளையடிக்க ஆரம்பித்தன.

இதனால் உணவுப் பொருள்களின் நெருக்கடி அதிகமாயிற்று. ஆங்காங்கே கலவரமும் கலகமும் கிளம்பிக் காடு பூராவும் அல்லோல கல்லோலப் பட்டது.

இந்த விஷயம் சிங்க ராஜாவின் காதிற்கும் எட்டியது. கலகத்திற்கு மூல காரணம் 'கள்ள மார்க்கெட்' நடப்பதுதான் என்று அதற்குத் தெரிய வந்தது. அவ்வளவுதான்; உடனே "கூப்பிடு, போலீஸ் புலியை!" என்று கோபத்தோடு கர்ஜித்தது.

போலீஸ் புலி நடுங்கிக் கொண்டே எதிரில் வந்து நின்றது. "நீங்கள் எல்லோரும் என்ன செய்து கொண்டு இருக்கிறீர்கள்?" என்று கேட்டுக் கோபத்துடன் பூமியை ஒரு அறை அறைந்து விட்டு, "இன்னும் ஒரு வாரத்திற்குள் கள்ள மார்க்கெட்டெல்லாம் தொலைந்தாகவேண்டும். இல்லாவிட்டால் உம்முடைய உத்தியோகம் போய்விடும்" என்று ஒரு உத்தரவு போட்டது.

விட்டால் போதும் என்று ஓடோடியும் போய்த் துப்பறியும் நாயிடம் ஓலம் இட்டது போலீஸ் புலி.

எவ்வளவோ திருட்டுகளைச் சாமர்த்தியமாகக் கண்டு பிடித்த துப்பறியும் நாயினால் கள்ள மார்க்கெட் வியாபாரிகளை மட்டும் கண்டு பிடிக்க முடியவில்லை.

கள்ள மார்க்கெட்டைக் கண்டு பிடித்துத் தகவல் கொடுப்போருக்குத் தகுந்த வெகுமதி கொடுப்பதாகக் கூட விளம்பரம் செய்யப்பட்டது. காக்கையின் மூலம் காடு முழுவதும் தண்டோராப் போடப்பட்டது. என்ன செய்தும், கள்ள மார்க்கெட்டைக் கண்டு பிடிக்கவே முடியவில்லை.

ஒரு நாள் காலை துப்பறியும் நாய் தன் ஆபீஸ் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தது. அதன் யோசனை முழுதும் கள்ள மார்க்கெட்டை எப்படிக் கண்டு பிடிப்பது என்பதிலேயே இருந்தது.

"என்ன? பித்துப் பிடித்தது போல் உட்கார்ந்திருக்கிறீர்களே!" என்று அதன் மனைவி கேட்ட பிறகுதான் தெரிந்தது.

"என்னடி பண்ணுகிறது? இந்தக் கள்ள மார்க்கெட் எங்கே எப்படி நடக்கிறது என்று கண்டு பிடிக்கவே முடியவில்லையே?" என்றது கலவரத்தோடு.

"எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அப்படிச்செய்யலாமா, பாருங்களேன்!" என்றது மனைவி.



"அது என்ன?" என்று கேட்டது ஆவலோடு புருஷ நாய். பிறகு இரண்டும் சேர்ந்து ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தன.

இது நடந்த இரண்டொரு தினங்களுக்குள் துப்பறியும் நாய் வீட்டிற்கு வௌவால்கள் ரகசியமாக வந்து போக ஆரம்பித்தன. நாயின் மனைவியும் அவைகளோடு ரகசியம் ரகசியமாகப் பேச்சு வார்த்தைகளை நடத்திற்று.

கொஞ்ச நேரத்திற்கெல்லாம் காட்டிலிருக்கும் போலீஸ் ஸ்டேஷன்களில் உள்ள டெலிபோன்கள் யாவும் சுறுசுறுப்பாய் வேலை செய்ய ஆரம்பித்தன. மாஜிஸ்ட்ரேட் குரங்கும் சாயந்திரம் வரை ரகசிய ஆர்டர்களில் கையெழுத்துப் போட்டுக் கொண்டிருந்தார். சாயந்திரத்திற்குள் அகப்பட்ட வௌவால்கள் சிறைப் படுத்தப் பட்டன. அவைகளிட மிருந்த உணவுப் பொருள்கள் எல்லாம் கைப்பற்றப் பட்டன.

சில தினங்கள் சென்றன. போலீஸ் புலி துப்பறியும் நாயைப் பார்த்து "உங்கள் சாமர்த்தியமே சாமர்த்தியம்" என்று புகழ்ந்தது.

"என் சாமர்த்தியம் இதில் ஒன்றுமில்லை. எல்லாம் என் மனைவியின் யோசனைதான். அவள் தான் கள்ள மார்க்கெட்டு மூலம் வெளி நாடுகளில் ரகசியமாக வியாபாரம் செய்யப் போவதாகவும் அதில் ஏராள லாபம் வருமென்றும் ஒரு வதந்தியைக் காடு முழுவதும் கிளப்பி விட்டாள்.

"காட்டில் ஏற்கெனவே கள்ள மார்க்கெட் வியாபாரம் செய்து கொண்டிருந்த போக்கிரி வௌவால்களுக்கெல்லாம் இந்த விஷயம் ரொம்ப உற்சாகத்தை அளித்தது. எனவே, எல்லா வௌவால்களும் என் மனைவியிடம் ஓடி வந்து தாங்களும் மேற்படி கள்ள மார்க்கெட் வியாபாரத்தில் கலந்து கொள்வதாகவும் தாங்கள் இதற்கு முன்பே இந்த வியாபாரம் செய்து வருவதால் அனுபவம் உண்டென்றும் கூறின.

"உடனே என் மனைவி யார் யார் கள்ள மார்க்கெட் வியாபாரம் செய்கிறார்கள் என்ற தகவலை என்னிடம் கூறினாள். எல்லா வௌவால்களையும் கண்டு பிடித்துவிட்டேன்" என்றது துப்பறியும் நாய்.

நாயின் மனைவிக்குச் சிங்க ராஜா தக்க வெகுமதி அளித்தார். புத்தி சாலித்தனமாகக் கள்ள மார்க்கெட் வியாபாரத்தைக் கண்டு பிடித்த நாயின் மனைவியைக் காட்டில் கொண்டாடாத மிருகமே இல்லை.



கலியாணப் பெண்ணின் போட்டோ அனுப்பும்படி கேட்டிருந்தோமென்றோ? குழந்தையாய் இருந்த போது எடுத்த இந்த ஒரே போட்டோதான் இருக்கிறதாம். அதை அனுப்பி இருக்கிறார்கள்!

# நாலணாப் பரிசு!

பகீரதன்

நம்மாழ்வார் நாயுடுவை எல்லாரும் கருமி நாயுடு என்றே சொல்லுவார்கள்.

ஆனால், யார் சொல்லுவதையும் லட்சியம் செய்யாமல் அவர் பணம் சேர்ப்பதையே குறியாகக் கொண்டிருந்தார். ஒரு நாள் அவர் தனக்கு வரவேண்டிய வட்டி பாக்கியை வசூலிப்பதற்காகப் பக்கத்து ஊருக்குக் கால் நடையாகச் சென்று கொண்டிருந்தார்.

வழியிலிருந்த ஆற்றைக் கடப்பதற்காகப் படகில் ஏறிச் செல்லவேண்டி இருந்தது. படகிற்கு இரண்டணா செலவு செய்ய மனமில்லாமல், "இதைத் தவிர வேறு வழியில்லையா?" என்று பக்கத்தில் உள்ளவர்களை விசாரித்தார்.

"கொஞ்ச தூரத்துக்கு அப்பால் ஒரு மூங்கில் பாலம் இருக்கிறது. அதன் வழியாகப் போகலாம். ஆனால் ரொம்ப ஜாக்கிரதையாகப் போக வேண்டும். கைப்பிடி கூடக் கிடையாது" என்று சொன்னார்கள்.

செலவில்லாமல் வழி காட்டினார்களே என்று சந்தோஷப் பட்டுக் கொண்டு பாலத்தை நோக்கிச் சென்றார் நாயுடு.

ஏதோ சிந்தனையில் எதிரில் வருகிறவர்களைக் கூடக் கவனிக்காமல் அவர்கள் மீது மோதிக்கொண்டு ஆற்றில் விழுந்துவிட்டார் நாயுடு. இரு கரையும் புரண்டு ஓடும் ஜலத்தைப் பார்த்தாலே கதி கலங்கும்போது யார் நாயுடுவுக்கு உதவி செய்ய முன்வரப் போகிறார்கள்?

எல்லாரும் "ஹா! நாயுடு! ஐயோ பாவம்!" என்று வருத்தப்பட்டார்களே ஒழிய, ஒருவராவது நாயுடுவுக்கு உதவிபுரிய வில்லை.

திடீரென்று 'தொபுக்' என்ற சத்தம் கேட்கவே, எல்லாரும் ஆற்றைப் பார்த்தார்கள். ஒரு வாலிபன் நாயுடுவை நோக்கி வேகமாக நீந்திச் சென்றுகொண்டிருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் நாயுடுவைச் சேர்த்துப் பிடித்துத் தூக்கிக்கொண்டு அவன் கரைக்கு வந்து சேர்ந்தான்.

நாயுடு வாலிபனைப் புன்முறுவலுடன் பார்த்தார். உடனே பரபரப்புடன் அங்குமிங்கும் தடவினார். இடுப்பு வேஷ்டியில் எங்கேயோ முடிந்து வைத்திருந்த முடிச்சை அவிழ்த்து அதிலிருந்து நாலணாவை எடுத்துத் தன்னைக் காப்பாற்றிய வாலிபனுக்குக் கொடுத்தார். அதைப் பார்த்த எல்லாருக்கும் தூக்கிவாரிப் போட்டது. "உயிரையே திரணமாக மதித்து ஒரு உயிரைக் காப்பாற்றிய உத்தமனுக்கு நாலணா கூலியா?" என்று எல்லாரும் ஆச்சர்யப்பட்டார்கள்.

ஆனால் அந்த வாலிபன் மட்டும் ஆச்சரியப் படவில்லை. அவன் மலர்ந்த முகத்துடன் அந்த நாலணாவை வாங்கிக் கொண்டான்.

"கருமி என்றால் இவன்தான் கருமி! உயிருக்குத் துணிந்து உயிரைக் காப்பாற்றியவனுக்கு நாலு அணாதானா எடுத்துக் கொடுப்பது?" என்று எல்லோரும் நாயுடுவை நிந்தித்தனர்.

"அவருடைய உயிரின் மதிப்பு நமக்கு எப்படித் தெரியும்? 'நம் உயிரின் மதிப்பு நாலணாதான் பெறும்' என்று நினைத்து அவர் நாலணாவைப் பரிசளித்திருக்கிறார் போலும்!" என்றார் கூட்டத்தில் ஒருவர்.

அதுவரை பேசாமல் இருந்த வாலிபன் சிரித்துக் கொண்டே சொன்னான்:—

"நீங்கள் நினைப்பதுபோல நாயுடு, தன்னுடைய உயிரின் மதிப்பு நாலணாத்தான் பெறும் என்று நினைத்து எனக்கு நாலணாப் பரிசளிக்கவில்லை. என்னிடம் ஒரு சமயம் கடனாக வாங்கிக் கொண்ட நாலணாவைத்தான் அவர் இப்போது திருப்பிக் கொடுத்திருக்கிறார். அதை எப்படியாவது அவரிடம் திருப்பி வாங்கிவிட வேண்டுமென்றுதான் நானும் அவர் உயிரைக் காப்பாற்றினேன்!"

## தீக்ஷிதர் திருவிழா

பாரதியாரைத் தந்து பாரதி விழாவைக் கொண்டாடிப் புகழ் பெற்ற எட்டயபுரத்தில், சங்கீத உலகில் மும்மணிகளுள் ஒருவர் என்று போற்றப்படும் தீக்ஷிதர் ஜயந்தியை [illegible] ஏப்ரல் 5, 6, 7 ஆகிய மூன்று நாட்களிலும் கொண்டாட முடிவு கட்டியிருக்கிறார்கள். அதற்கு எட்டயபுரம் ராஜாவைப் போஷகராகவும் ஸ்ரீமான்கள் டி. எல். வெங்கடராமய்யர், அரியக்குடி, செம்மங்குடி, வெங்கடேஸ்வரன் ஐ.ஸி.எஸ். முதலியவர்களை அங்கத்தினர்களாகவும் கொண்ட கமிட்டி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்த வைபவத்துக்கு அன்பர்கள் தங்களாலான பொருளுதவியை ஸ்ரீ அமிர்தசாமி, தென் அரண்மனை, எட்டயபுரம் என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறோம்.

# அடித்துத் துவைப்பதா லேற்படும் வீண் நாசத்தைப் போக்குங்கள்—இம்மாதிரி உடைகளைச் சலவை செய்யுங்கள்









பழைய முறையில் அடித்துத் துவைத்துச் சலவை செய்வதால் உடைகள் அனாவசியமாய் நைந்தும், கிழிந்தும் போகின்றன—இந்தப் பாழும் தோற்றத்தால் நீங்களும் உங்கள் நண்பர்களும் அடிக்கடிக் கவலைக் குள்ளாகிறீர்கள்.

எண்களிடப்பட்ட இந்தப் படங்களில் காட்டப்படும் முறையைப் பின்பற்றுங்கள். கீழே தரப்படும் புத்திமதிகளைக் கையாளுங்கள். உங்கள் உடைகள் யாதொரு தீங்குமின்றி உண்மையில் சுத்தமாய்ச் சலவை செய்யப்படுமென்பதைப்பற்றி நீங்கள் உறுதியாய் நம்பியிருக்கக்கூடும்.

4



(1) சலவை செய்யவேண்டிய உடையை நன்றாக நனையுங்கள்—குழாய், தொட்டி, குளம், ஆறு அல்லது ஓடை ஆகிய இவற்றை நீங்கள் உபயோகிக்கலாம். அதனால் யாதொரு வித்தியாசமும் இல்லை.

(2) நன்றாக உடை நனைந்தபிறகு ஸன்லைட் சோப்பை அதன்மீது முழுவதும் தேயுங்கள். (அழுக்கேறின பாகத்தில் ஸன்லைட்டைத் தாராளமாகத் தடவவும்).

(3) சோப் உடை முழுவதும் பரவக் கசக்கவும் (சப்பாத்தி செய்ய மாவை எப்படி நீங்கள் பிசைகிறீர்களோ அப்படிச் செய்யவும்). துணியின் இழையில் சோப் நுரை படும்படி அதை முழுவதும் கசக்கிப் பிழியுங்கள். முரட்டுத்தனமாக துணியைத் தேய்க்கவேண்டிய அவசியமே இல்லை. அழுக்குள்ள இடங்களிலெல்லாம் நுரை படும்படி தேய்த்துக் கசக்கினால், ஸன்லைட்டின் சுயமாக பெருகும் நுரை எல்லா அழுக்கையும் மெதுவாகப் போக்கிவிடும். இந்த சக்திவாய்ந்த நுரையிலுள்ள "சிறந்த" சோப் பட்டமாத்திரத்தில் ஆடையிலுள்ள அழுக்கு நீங்கிப்போய் நுரையிற் சேர்ந்துவிடுகிறது. ஆகையினாலேயே துணியை நுரையிலிருந்து அலசிக் கழுவும்போதே அழுக்கையும் நீங்கள் அகற்றிவிடுகிறீர்கள்.

(4) அழுக்கு இப்பொழுது அடங்கியிருக்கிற நுரையை ஆடையிலிருந்து போகும்படி அலசிச் சுத்தம் செய்யுங்கள்.

இந்த மிருதுவான ஸன்லைட் முறைப்படி துணிகளைச் சலவை செய்தால் அவை வெகுநாளைக்கு நீடித்துவரும்.




## ஸன்லைட் சோப்
## துணிகளைப் பாதுகாக்கிறது

S. 76-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED



# எப்பொழுதும் குறித்த நேரத்தில்

குறித்த நேரத்தில் போய்ச் சேர T.V.S. லாரி ஸர்வீஸை நீங்கள் நம்பலாம். தென்னிந்தியாவில் அட்டவணைப் பிரகாரம், குறித்த நேரத்தில் தவறாது போய்ச்சேர உத்திரவாதமளிக்கும் போக்குவரத்து சாதனம் இது ஒன்றுதான்.

**T. V. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ், லிமிடெட்**

மதுரை & சென்னை.

TVSR-19 TM

போக்குவரத்து சாதனமளிப்பது எங்கள் தொழில்.



# சரும சுகத்திலிருந்து சரும அழகு ஏற்படுகிறது!

# ரெக்ஸோனு வினல் சரும ஆரோக்கியத்தைக் காப்பாற்றுங்கள்

உங்கள் சருமம் உண்மையாய் எப்பொழுதும் அழகுடன் இருப்பதற்கு முன் அது ஆரோக்யமுடையதாய் இருக்கவேண்டும். அதை ஆரோக்யமுடன் வைத்துக் கொள்ளவேண்டும்; இல்லையெனின், அதன் அழகு வெகு விரைவில் மறைந்துவிடும். சருமத்தைக் காப்பாற்றி, அதன் அழகை விருத்தியாக்கவே ரெக்ஸோனு வழங்கப்பட்டு வருகிறது. அழகுள்ள, பசுமை வாய்ந்த விரைவில் நுரையைத் தரும் இந்த டாய்லட் சோப்பில் சுகமளித்துச் சரும நோய்களைக் குணப்படுத்தும் கேடில் என்ற கிரிமி நாசினியாகிய மருந்து சேர்ந்திருக்கிறது. விரைவிலுண்டாகும் ரெக்ஸோனுவின் சிறந்த நுரை சருமத்தின் ஒவ்வொரு அடிபாகத்திலும் இந்த ஆரோக்யத்தை அளிக்கும் கேடில் என்னும் மருந்தைக் கொண்டுபோய்ச் சேர்த்து நன்மையைக் கொடுக்கிறது. அதே சமயத்தில் அதன் நுரை சருமத்தின் மீது படிந்துள்ள அழுக்கையும் வியர்வையால் ஏற்படும் மலினங்களையும் சுத்தி செய்கிறது. சருமம் தூய்மையடைகிறது; அதற்குச் சுகத்தைக் கொடுக்கிறது; அதை மேன்மேலும் பளபளப்பாக்கி, காப்பாற்றுகிறது; அதை நன்ருய்ப் போஷிக்கத் துணை செய்கிறது. சரும சுகத்தின் பொருட்டு ஒவ்வொரு ஸ்நானத்திற்கும் ரெக்ஸோனுவையே உபயோகியுங்கள்.



குழந்தைகளுக்கு ரெக்ஸோனு: ரெக்ஸோனுவின் நுரை மிருதுவாயிருப்பதால் இது குழந்தையின் மெல்லிய சருமத்திற்குச் சிறந்தது. டாக்டர்கள் அதை சிபார்சு செய்கிறார்கள். குழந்தையின் சருமத்தை எரிச்சல், அரிப்பு முதலியவைகளிலிருந்து ரெக்ஸோனுவிலுள்ள கேடில் காப்பாற்ற உதவுகிறது.

★ரெக்ஸோனுவிலுள்ள கேடில் கிருமியையொழிக்கும் ஒப்பற்ற மருந்து. சரும ஆரோக்யத்திற்கு மிகவும் சக்தி வாய்ந்ததும் குணமாக்கிப் போஷிக்கும் தன்மை வாய்ந்த தைலங்களும் சேர்ந்தது.




ரெக்ஸோனு ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள். வெட்டுக்காயங்கள், புண்கள், கட்டிகள், கரப்பான், ரணங்கள், முகப்பருக்கள், அரிப்புகள், சிவப்புகள், கடிகள், மச்சமறுக்கள் முதலிய எல்லாச் சரும வியாதிகளுக்கும் ரெக்ஸோனு ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள்.

# சைபால் - CIBOL

முகப்பரு, சேத்துப் புண், சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்கு கைகண்ட மருந்து

•

# அயோடிசால் - IODISAL

ரத்தத்தைச் சுத்தி செய்து திரேகத்திற்கு
ஆரோக்கியத்தைக் கொடுக்கும்.

**பாட்டில் 1-க்கு விலை ரூ. 2—0—0**

•

# பேபி - கிரைப் BABY - CRIPE

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு, வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம். பல் முளைக்கும்போது ஏற்படும் வயிற்றுப்போக்கு, முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்.

•

தயாரிப்பவர்கள் :

## தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி, மதுரை

மதராஸ் ஸிடி, நெல்லூர், ஸீடெட், விசாகப்பட்டணம்
ஜில்லாக்களுக்கு ஏஜண்டுகள் :

**ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ், பி. டி. மதராஸ்**

குண்டூர், கோதாவரி, கிருஷ்ணா ஜில்லாக்களுக்கும்
நிஜாம் சமஸ்தானத்திற்கும் ஏஜண்டுகள் :

**சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா**

மைசூர் சமஸ்தானத்திற்கு ஏஜண்டுகள் :

**சேஷமஹால் பார்மஸி, பெங்களூர் ஸிடி**

Regd. No. M. 4392




# சார்லீஸ்
# சார்லீ
# பிஸ்கட்ஸ்

அழகிய
டின்களில்

Muli

**CHARLEY & CO., USILAMPATTI.**

Agents For Salem & N. Arcot Dts. The General Agencies Corporation, First Agraharam, Salem. Agents For Nilgris: Messrs. Brilliant Traders, Ootacamund.